

ஏற்றரும் வைகுந்தத்தையருளும் நமக்கு ஆயர்குலத்து
ஈற்றிளம் பிள்ளையொன்றாய்ப்புக்கு மாயங்களேயியற்றி
கூற்றியல் கஞ்சனைக்கொன்று ஐவர்க்காய்க்
கொடுஞ்சேனை தடிந்து
ஆற்றல்மிக்கான் பெரிய பரஞ்சோதி புக்கவரியே.

அபபோது பிறநது விலக்ஷணமான பசசைப் பசுங்குழந தையாயக கொணடு திருவாயபபாடியிலே சென்று சேரந்து பறபல அற்புதசசெயலகளையே செயது, யமன போனற கம் சனைக கொனறு, பிறகு பஞசணடவரகளுக்குத் துணையாய இருநது கொடிய பகைவரகளை அழிதது, மிகுநத நெஞசுரம் கொணடவனாய பரமபதம அடைநது ஹரியான எமபெருமான் யாரககும எளிதாகக கிடைககவொணணுத பரமபததை நமககுத தநதருளுவான.

--நமமாழவார் திருவாய்மொழி 7-6-10

# ஸப்தகிரி

ஆகஸ்ட் - 1995


தனிப்பிரதி ரூ. 2 — மலர் 26

வருடச்சந்தா ரூ. 24 — இதழ் 3



சிறப்பாசிரியர் :
திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முகப்பட்டை | : ஸ்ரீகிருஷ்ணர் - சித்திரம்: விவேக் |
| முதல் உள்ளட்டை | : திருமலையில் பவித்ரோத்ஸவம் |
| 2-வது உள்ளட்டை | : ஸ்ரீவேணுகோபால சுவாமி கோயில், உத்ஸவர் மற்றும் தெப்பக்குளம் - காருவேட்டுநகரம் (ஆ.பி.) |
| பின்னட்டை | : ஸ்ரீவைகானாசார்யர் - சித்திரம்: ஜெகதீஷ். |
| உள்ளே | : காளிங்கமர்த்தனம் - சித்திரம்: மா.ஸ்ரீ. ஸ்ரீவிநாயகர். சித்திரம்: என்.வி. கணபதி. |

JAGADISH

# உங்களுடன்....

வான்மீகியும் கம்பனும் இராமனை ஒரு சில இடங்களில் நேரிடையாகவும், மறை முகமாகவும் இறையவதாரமாகக் குறிப்பிட்டாலும், காவியம் முழுவதும் ஒரு சாதாரண மனிதனாகத்தான் காட்டியுள்ளனர். ஒரு சாதாரண மனித நிலையில் நின்று பிரச்சனை களை எதிர்கொள்ளும் இராமனாகத்தான் நமக்கு அறிமுகப்படுத்தியுள்ளனர். இராமன் நிலை கண்டு, அவன் படும் துயர் கண்டு நாமும் கவலையுறுகின்றோம். இராமனுக்காக நமது மனமும் அழுகின்றது. ஆனால் ஏதோ ஒன்று நமக்கும் இராமனுக்கும் இடையே திரையாக விளங்குகின்றது. இராமனிடம் அமைந்துள்ள சில உயர் குணங்கள் நம்மை அவனுடன் நெருங்கவிடவில்லை. அதனால்தான் இராமன் மரியாதை புருஷனாக நமக்குத் திகழ்கின் றான். இராமனுக்கு எதிர்மறையான அவதாரமாக 'கிருஷ்ணவதாரம்' (இரு அவதாரங்களும் பூர்ணவதாரமாக விளங்கினாலும்) திகழ்கின்றது. கண்ணன் தன் பரத்துவத்தைக் காட்டிடும் வகையில், தீயோரைக் கொல்வதற்காகவே தான் அவதாரம் மேற்கொண்டதைக் காட்டிக் கொள்ளும் வகையில் தன் பிறப்பை மேற்கொள்கின்றான்.

பிறந்த போது பெற்றோர்க்கு அதிசயமாகவும், தவழ்ந்த போது வளர்த்தோர்க்கு பிர மிப்பாகவும், குழலூதிய போது சூழ்ந்தோர்க்குக் காதலனாகவும், படையேந்திய போது எதிர்த்தோர்க்குக் காலனாகவும், ஐவருடன் சேர்ந்தபோது தத்துவ முதலோனாகவும், ஞானத் தின் ஊற்றாகவும், பக்தியின் எல்லையாகவும் கண்ணன் திகழ்ந்தான். தன்னுடைய ஒவ்வொரு லீலாவினோதங்களின்போதும், தான் இறையம்சமே என்பதை வலியுறுத்தவே செய்கின்றான். இருப்பினும் அக்கண்ணனை, அவன்தம் செய்கைகளைக் கண்டோர், கேட்போர் யாவரும் அவர்களையும் மீறி அவனிடமிருந்து இறைத்தாக்கத்தையும் மீறி அன்புத்தாக்கத்தையே பெறுகின்றனர். இராமனை எட்டிநின்று தொழும் நாம், கண்ணனுடன் கைக்கோர்த்து நிற்கவேண்டும் என்ற உணர்வு நம்மிடம் மேலோங்குகின்றது. இராமன் விதியுடன் போரா டும் போது, கண்ணனை அவ்விதியுடன் விளையாடுகின்றான். இருவரும் விதிவழியேதான் செல்கின்றனர். ஆனால், இராமன் விதிக்குப்பின் செல்கின்றான். கண்ணன் விதிக்குமுன் செல்கின்றான். மேலும், விதியை மதிவழி வெல்ல உபாயங்கள் உண்டு என்பன பற்பல இடங்களில் கண்ணன் அறிவுறுத்துகின்றான். தன்னை ஒரு சாதாரண மனிதனாகக் காட்டிக்கொண்டால் எங்கே தன்னை இராமனைப் போன்று ஓர் உயர்ந்த நிலையில் வைத்து தன்னிடமிருந்து ஒதுங்கிவிடுவார்களோ அல்லது காலத்தின் கோலத்தால் வெறும் மனிதன்தானே என்று எண்ணி எங்கே தன்னை ஒதுக்கிவிடுவார்களோ என்று அஞ்சி, தன் பரத்துவத்தைக்காட்ட தன் மாயைச் செயல்களைக் காட்டினான். இதற்கு கீதையின் 'அவஜா நந்தி மாம்மூடா: மாநுஷிம் தநுமாச்ரிதம்' எனும் வரிகளே சான்றாகும். கோசலை மைந்தன் கர்ம காண்டத்தின் பெருமையைக் கூறிட்ட போது, கோகுல நாயகன் ஞான காண்டத்தின் உயர்வினைச் சுட்டிக்காட்டினான். அதாவது ஜீவாத்மா பரமாத்மாவுடன் இணைந்திட வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தவே இவ்வவதாரத்தை அம்மாயன் மேற்கொண்டான் என்றே கூறவேண்டும். இவ் இணைப்புக்கு அடிப்படைத் தேவை 'பக்தி' ஒன்றேயாகும். இப்பக்தியே பல்வேறு பெயர்களில் பல்வேறு உணர்வுகளில் பெற்றிடும் ஓர் உணர்ச்சியாகும். இவற்றில் அன்பு, காதல் போன்றவையும் அடங்கும். இங்குக் 'காதல் என்பது 'பகவத் காமம்' ஆகும். இவ்வுணர்வுகளுக்கு இறைப்பற்றினை அல்லது இறைநாட்

டத்தை நம்மில் கொள்ள வேண்டும். அதற்கு நாம் நம்மிடம் உள்ள உலகாயுத ஆசைகளை, பற்றுக்களை விடுதல் அவசியமாகும். இதனை வலியுறுத்தும் "பரமாத்மநி யோ ரக்த: விரக்த: அபரமாத்மநி" எனும் வடமொழி கருத்தினையே வள்ளுவனும் 'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றினைப் பற்றுக பற்றுவிடற்கு' எனும் வரிகளால் உறுதிப்படுகின்றார்.

கலியுகத்தின் ஒரு முன்னோட்டமாகவே துவாபரயுகத்து நிகழ்ச்சிகள் திகழ்கின்றன. பேராசை, காமம், பொறாமை, கோபம், கயமை போன்ற குணங்களைக்கொண்ட மாந்தர்கள் கண்ணன் சரிதையில் நடமாடிட, அவர்களை மதியால், வீரத்தால் எல்லாவற்றிற்கும் மேலாக பக்தியால் வலுவழியச் செய்யும் காட்சிகள் நமக்குக்கூறும் பாடங்களாகும். கண்ணன் நினைத்திருந்தால், தன் பரத்துவத்தை தானே நேரிடையாக நிலைநாட்ட விரும்பியிருந்தால், கண்ணபெருமான் வரலாறு - அவதாரம் அவனுடைய குழந்தைப் பருவத்திலேயே முடிந்துவிட்டிருக்கும். ஆனால் பல்வேறு மனநிலைகளைக் கொண்ட, பல்வேறு பலவீனங்களைக் கொண்ட, ஆற்றல்களைக் கொண்ட மாந்தர்களால் தன் வெற்றிக் காய்களை நகர்த்துகின்றான் அக் கிரிதரன். துவாபரயுகத்தில் அன்று வாழ்ந்த கம்சன், திருதராஷ்டிரன், துரியோதனன், துச்சாதனன், சகுனி என்று விரல்விட்டு எண்ணக்கூடிய அளவில் திகழ்ந்த அவர்களைப் போன்றோர், இன்று கலியுகத்தில் ஆயிரக்கணக்கில் பல்கிப்பெருகி நம்மிடையே வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்; சமுதாயத்தைச் சீரழித்துவருகின்றனர். இதனைத் தடுத்திட, அன்றைய பாண்டவர்களிடம் அமைந்தது போன்று அன்பு, கருணை, தியாகம், பொறுமை போன்ற உயிர்குணங்களைக் கொண்ட் பல்லோர் நம்மிடையே வாழ அவசியமாகின்றது. 'அன்பே தெய்வம்' என்பதற்கிணங்க, அன்பினால் இவ்வையகத்தைப் பாலித்திட முடியும் என்பதற்கேற்ப அன்பின் எல்லைக்கோடான பக்தியினால் கண்ணனை நாடினார்கள் அப்பாண்டவர்கள்.

ஒருவன் ஆண்டவனிடம் பக்தி செலுத்திடும் போது, 'அன்பு' எனும் உணர்வினைச் சுற்றியுள்ளோரிடம் காட்டிடும் ஒருநிலை உண்டாகின்றது. இதனைத்தான் கண்ணன் ஜீவர்களிடம் எதிர்பார்க்கின்றான். இதனை உணர்ந்துதான் ஆழ்வார்களும் 'அன்பிலானலன்றி ஆழியானை யாவர் காண வல்லரே' என்றும் "கண்ணனுக்கே யாமது காமம்" என்றும் கூறிப்போந்தனர். உண்டிக்கும் உடுக்கைக்கும் மேலாக இன்று உலக வாழ்க்கைக்குத் தேவை அமைதி, சகோதரத்துவம், அன்பு போன்றவையே என்ற நிலை உருவாகியுள்ளது. இழந்த நாடு கிடைக்காவிட்டாலும் ஐந்து கிராமங்களாவது துரியோதனன் தந்தால் போதும் என்று இறுதிவரை பாரதப்போரைத் தவிர்த்திடத் துடித்திட்ட தருமனும், எந்தக் காலக்கட்டத்திலும் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக்கொண்டு அண்ணனுக்கும், பெரியோர்களுக்கும் கீழ்ப்படிந்து பொறுமையின் சிகரங்களாக நடந்திட்ட பாண்டவர்களும், வீரம், விவேகம் இருந்தாலும் நமக்கு மேலே ஒருவன் உள்ளான் என்பதை அறிந்து செயல்பட்டு கண்ணன் மீது அளவிலா பக்தி பூண்ட மகாபாரதத்து கதை மாந்தர்களும் நமக்கு இன்று சிறந்த வழிகாட்டிகளாவர். ஆம் கண்ணன் சரிதையை சற்றே ஆழ்ந்து பின்பற்றினோமேயானால், அக்காவிய மாந்தர்களும், நிகழ்ச்சிகளும் நம்மை வளப்படுத்திக் கொள்ளும் வாழ்க்கை அனுபவங்களாகும். அவற்றை கீதைவழி நின்று, நாம் அறிந்து தெளிந்தோமேயானால், அதுவே கீதையின் நாயகனுக்கு நாம் செலுத்திடும் இறை வணக்கமாகும்.



# மீராவின் பக்தி

திரு. க. கருப்பையா - இராஜபாளையம்

ஆண்டவனுடைய பேரருளைப் பெறுவதற்கு நான்கு நெறிகளை நம் முன்னோர் பின்பற்றினர். கருமயோகம், பக்தியோகம், ராஜயோகம், ஞான யோகம் என்று மெய்ஞானியர் விளம்புவர். தீராத பக்தி செலுத்தி இறைவனுடைய இன்பத்திலேயே திளைப்பது பக்தி யோகம் எனப்படும். அன்பின் முதிர்ச்சி பக்தியாக மலர்கிறது.

திருமாலின் திருவருளில் நம்மையெல்லாம் ஆழ்த்துகின்ற ஆழ்வாராதிகள் பன்னிருவருள் ஒருவர் - ஆண்டாள் நாச்சியார். அவருடைய தந்தையார் பெரியாழ்வார். இவ்விருவரும் தென்பாண்டித் தமிழகத்தில் ஸ்ரீவில்லிப்புத்தூரில் அவதரித்தனர். ஆண்டாள் அவதரித்த நாள் முதல் தந்தை பெரியாழ்வார் அரங்க நாதப் பெருமானுக்கு மலர்த்தொண்டு செய்துவருவதைக் கண்டு மகிழ்ந்தாள். கண்ணபிரானுடைய எளிவந்த தன்மையைத் திருப்பாவைப் பாசுரங்களாகப் பாடி எம்பெருமானின் திருவருளில் திளைக்க எல்லோரையும் அழைக்கிருள். தன்னை முழுமையாகக் கண்ணபிரானுக்கு ஆட்படுத்த ஆவல் கொள்கிருள். எங்கும் நிறைந்த எம்பெருமானுக்குத் தான் ஏற்றவளா? என்பதை அறிய எம்பெருமானுக்காகத் தொடுத்த மலர் மாலையைத் தான் சூடிப்பார்த்தாள். அம்மாலையையே அரங்கநாதப் பெருமானுக்கு உகந்த மாலையாயிற்று. தன்னை மறந்தாள். அரங்கநாதப் பெருமானையே அடைந்தாள்.

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியை போலவே வடநாட்டில் ஒரு சிற்றரசனுக்குப் புதல்வியாகத் தோன்றிய மீராபாய் சிறு குழந்தையாக இருந்த போது தாயார் கண்ணபிரான் விக்கிரகத்தைக் காட்டி, “மாயவன் மன்னு வடமதுரை மைந்தனே உன் மணவாளன்” என்று விளையாட்டாகக் கூறியதை மனதில் ஆழப்படுத்திக் கொண்டாள். ஆயர்குலக் கொழுந்து தன்னைத் திருமணம் செய்து கொள்வதாகக் கனவு காண்கிருள். மீராபாய் ஹிந்தி மொழியிலே பாடிய பாசுரங்களைக் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை தமிழில் பாடியுள்ளார். மீராவின் மனத்திலுள்ள எண்ணங்களை ஒளிவு மறைவில்லாமல் தண்டமிழ்ப் பாசுரங்களில் வெளிப்படுத்துகிருர்.

“அன்னையே! தாயே! அழகன்
ஜெகதீசன்
என்னை மணக்க இரவில்
கனாக் கண்டேன்;
நென்னல் இரவு கண்ட நீண்ட
கனா முழுதும்
உன்னை ஒளியாமல் உரைக்கின்றேன்
கேளம்மா!”

“தோரணம் நாட்டித் துழாய்
மாலை தொங்கவிட்டுப்
பூரண கும்பம் பொலிவாக
முன்வைத்துத்
தாரணி போற்றத் தகுமோர்
புரோகிதர் வந்து
ஆரணம் ஓதக் கனாக் கண்டேன்
அம்மா நான்”

“செய்தற்கரிதாம் அத்திருமணப்
பந்தரின் கீழ்
வையம் அளந்து வளர்ந்த
வடிவழகன்
ஐம்பத்தாறு கோடி ஆட்கள்
நடுவேஎன்
கையைப் பிடிக்கக் கனாக் கண்டேன்
அம்மா நான்”

இவ்வாறு மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களாலும் கண்ணபிரானையே வழிபட்டாள். மனம் திருமகள் கேள்வனின் திருவடியைத் தியானித்தது. மொழி அரங்கநாதப் பெருமானின் அருட்பெருங்கருணையைப் பாசுரங்களாகப் பாடியது. மெய் எத்திசையிலும் சிறந்தோங்கியுள்ள திருக்கோயில்களை வலம் வந்து வணங்கியது. கண்ணபிரான் மீது உண்மையாகப் பக்தி செலுத்துகின்றவர்கள் மட்டுமே அவனைக் கண்டிடுவர். அல்லாமல் நாள்தோறும் நீராடுவதாலோ, காயும் கனியும் அருந்துவதாலோ ஆதியந்தமில்லாப் பெருமானை அடையமுடியாது எனப் புகல்கிருள்.

“நித்தம் நித்தம் நீராடில்
நெடுமால் அருளைப் பெறலாமேல்
தத்தும் தவளை, மீன்களும் அத்
தனிப்பேறடைய வேண்டாவோ?
உண்மை அன்பை உடையவரே
உலகை அளந்த பெருமானை
அண்மையாகக் கண்டிடுவர்
அல்லார் காணுர்; காணுரே!”

மீராபாய் கண்ணபிரானைக் கனவில் கண்டதோடு மட்டும் அல்லாமல் நனவிலும் கண்டு ஆனந்திக்கிருள். கண்ணபிரான் திருமுன் அறுசுவை உணவை வைத்துக் கொண்டு கல்லினுள்

தேரைக்குக் கருப்பை உயிர்க்கும் உணவளிக்கும் பெருமானுக்கு உணவளித்து உண்டருளுமாறு வேண்டுகிறாள்.

"விதவிதமாய்ப் பண்டங்கள் செய்து
வைத்தேன்
விண்ணமுதம் எனக்கறிகள்
சமைத்து வைத்தேன்
இதமுறவே என்மீது இரங்கிநீஇவ்
ராஜவிருந்தை உண்டருள
வேண்டும் ஐயா!
பதமலரை முடியணிந்து பணிந்து
நின்றேன்
பகவானே! கிரிதரனே! பாரில்
என்றும்
சதம் எனவே நம்பிவரும் அடியார்
உள்ளம்
சலியாது காத்தருளும்
தேவ தேவே!"

மீரா
பாய் காணும் காட்சியெல்லாம் கண்ணபிரான். அங்கு இங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்து எல்லாமாக இருப்பவனை நம்மாழ்வார் திருவாய்மொழிப் பாசுரத்தில் பாடிக் காண்பது போல மீராபாய் கண்ணபிரானைக் காண்கிறாள்.

"கூவுமாறறிய மாட்டேன்
குன்றங்கள் அனைத்தும் என்கோ,
மேவுசீர் மாரி என்கோ
விளங்கு தாரகைகள் என்கோ?
நாவியல் கலைகள் என்கோ
ஞானநல் ஆவி என்கோ?
பாவுசேர்க் கண்ணன் எம்மான்
பங்கயக் கண்ணனையே!"

எப்பொழுதும் கண்ணபிரானைத் தியானிப்பதும், அவன் புகழ் பாடுவதும், அவன் திருக்கோயில்களை வலம் வந்து வழிபடுவதுமாக இருக்கும் மீராபாய் தன் செயல்களையெல்லாம் கூறி அப்பெருமானிடம் வேண்டுவதைப் பாருங்களேன்.

"ஆளடிமையாக எனை அமர்த்திக்
கொள்வாய்,
அழகாக நந்தவன வேலை
செய்வேன்;
நாள்விடிய எழுந்துன்னை
நமஸ்கரிப்பேன்,
நலமிகவே நின்கதைகள் பாடி
நிற்பேன்
மீள்கூலியாய் உனது காட்சி
போதும்;
மேற்செலவுக்கு உன் நாமசெபமே
போதும்;
நீள்செல்வம் பக்தியல்லால்
வேறொன்றில்லை
நித்தியனே! நின்மலனே!
நிகரில்லோனே!

மீராபாய் இவ்வாறு அறுபத்தேழு ஆண்டுகள் இந்த நிலவுலகில் கண்ணபிரானின் அருளுக்கு ஏங்கித் தவித்துத் திருக்கோயில்கள் அனைத்திற்கும் தீர்த்த யாத்திரை சென்றாள். பரந்தாமனின் புகழைப் பாமரரும் அறியும்வண்ணம் இசைப்பாடல்கள் பாடித் துதித்தாள். பக்தர் வெள்ளம் அவர்பின்னால் பரவி வந்தது. நிறைவாக பிருந்தாவனத்திற்கு வந்தாள். முழுமையாகச் சரணாகதி அடைந்தாள். மீராபாய் தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு கண்ணபிரானிடம் வேண்டினாள்.

"என்றும் எனைநீ ஏற்றுக்கொள்;
எனக்குத்துணை வேறு
ஏவருமில்லை
கன்று பசியும் எனக்கில்லை
கண்ணில் உறக்கம்
சிறிதும் இல்லை
துன்றும் உடலும் குறுகி
ஒரு துரும்பாய்த்
தேய்தல் கண்டிலையோ?
நன்று தருவாய்; எனைக்கூடி
நடுவில் பிரியாது அருள்வாயே!"

ஒரு பேரொலியுடன் கண்ணபிரானின் விக்கிரகம் இரண்டாய்ப் பிளந்து மீராவைத் தன்னுள் அடக்கிக் கொண்டது. மீராபாய் கண்ணபிரானின் திருவருளில் ஒன்றிவிட்டாள்.



முந்நீர் ஞாலம் படைத்த (3-2-1)

**178.** மஹாத்யுதி: வேறொரு சுடர்ப்பொருளை நாடாமல், தானே சோதிமயமானவன், தேஜஸ் குறிப்பு.

அதனில் பெரிய பரநன்மலர்ச் சோதீயோ (10-10-10)

[அதனில்-பரந்த ஸ்ரீவைகுண்டத்திலும், இதிற் காட்டிலும் பெரிய சோதி மயமானவன்.]

**179.** அநிர்தேச்யவபு: (இவ்வாறு ஆறு குணங்களாலே பூர்ணமாக இருப்பதால்) உவமை சொல்லக்கூடாத திவ்யமான திருமேனி வாய்ந்தவன்.

படியே இதுவென்று உரைக்கலாம் படியன்
அல்லன், பரம்பரன் (8-8-2)

[படி-ஒப்பு, உரைக்கலாம் படி-உரைப்பதற்கு.]

**180.** ச்ரீமாந்- இத்திருமேனிக்கு ஏற்ற தீவ்யாபரண சோபை வாய்ந்தவன்.

படிச்சோதி ஆடையுடன் பல்கலனாய் (3-1-1)

[படி-திருமேனி, கலன்-ஆபரணம்.]

## 5. குணங்களுக்கேற்ற செயல்கள்

**181.** அமேயாத்மா கடல்போல் பரந்த பெருமையால், தனது இயல்பு எவரானும் அறிய இயலாதவன்.

கடல் புரையுஞ் சீலப் பெருஞ்சோதிக்கு (பெ.திரு.4)
யாரும் ஓர் நிலைநடயன் என அறிவரிய
எம்பெருமான் (1-3-4)

**182.** மஹாத்ரி த்ருத் கடல் கடைந்தபோது, ஆமையாகி மந்தர மலையைத் தாங்கியவன்.

மணல் கொண்டு மத்தா (தி.விரு. 51)

மஹேஷ்வாஸோ மஹீபர்த்தா
ஸ்ரீநிவாஸ: ஸதாம்கதி: ।
அநிருத்த: ஸுராநந்தோ
கோவிந்தோ கோவிதாம் பதி: ।। 20 ।।

**183.** மஹேஷ்வாஸ: செய்த அவதாரங்களில் வியக்குமாறு அம்புகள் பெய்தவன்.

தீவாய் வாளி மழை பொழிந்த சிலையா
(6-10-4)

[தீவாய்-நெருப்பை உமிழும், வாளி-அம்பு]

**184.** மஹீபர்த்தா ஆமையாய் எப்போதும் பூமியைத் தாங்குவோன். லீலையாகவே பூமியைத் தாங்கும் சீலன்; பூமியைத் தன் வயிற்றுள் வைத்துக் காப்பவன்.

புவியும் இருவிசும்பும் நின்னகத்த (பெ.திரு. 75)

**185.** ச்ரீநிவாஸ: கடல் கடைந்தபோது தோன்றிய லக்ஷ்மியைத் திருமார்பில் ஏற்றுக் கொண்டவன்.

முன் பரவை கடைந்து அமுதங்கொண்ட மூர்த்தீயோ
(7-1-10)

[பரவை-கடல் அமுதம்-அமுதம்போல் இனிய பிராட்டி; விண்ணவர் அமுதில் வரும் பெண்ணமுது.]

**186.** ஸதாங்கதி: லக்ஷ்மீ ஸம்பந்தத்தால் சான்றோர்க்குத் தஞ்சமாக இருப்பவன்.

அலர்மேல்மங்கை உறைமார்பா!..... என்னை ஆள்வானே
(6-10-10)

**187.** அநிருத்த: அளவு கடந்த செயல்களால் அநிருத்தன் என்று புகழப்பெறுவோன்.

ஆற்றல்மிக்கு ஆளும் அம்மானை (4-5-1)

**188.** ஸுராநந்த: (ஆபத்பந்துவாதலால்) தேவர்களைக் களிக்கச் செய்பவன்.

**189.** கோவிந்த: ஆபத்தில் உதவுவதால் (இவனை) தேவர்கள் ஆனந்தத்தால் வாழ்த்தும் பெருமையுடையவன்.

இமையோர்கள் ஏத்தி இறைஞ்சி இனமினமாய்
வழிபாடு செய்யும் (6-10-6)

**190.** கோவிதாம்பதி: வேதம் வல்லோர்கட்கு இறைவன்; இவர்களுள் சிறந்தோன்,

வேதநாவர் வணங்குந் திருக்கண்ணபுரத்து
ஆதியானை (9-10-9)

மரீசிர் தமநோ ஹம்ஸ:
ஸுபர்ணோ புஜகோத்தம: ।
ஹிரண்யநாப: ஸுதபா:
பத்மநாப: ப்ரஜாபதி ।। 21 ।।

**191.** மரீசி: இவர்களுக்குத் தனது திவ்ய ரூபத்தைக் காட்டுமவன்; ஒளிமயமான வடிவுடையவன்.

குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச்

சோதி வெள்ளத்தினுள்ளே - எழுவது
ஓர் உரு (5-5-10)

192. தமந: இந்தத் திருமேனி ஒளியால் ஸம்ஸார தாபத்தை அடக்குவோன்.

தானே தடுமாற்ற வினைகள் தவிர்த்தான் (10-8-5)

[தன்னைப் பிரிந்து தடுமாறுவதற்குக் காரணமான வினைகளைப் போக்கினான்.]

193. ஹம்ஸ: அன்னமாய் அவதரித்தவன், அழகிய வர்ணமுடையவன் ஸம்ஸாரமாகிய கடலிலிருந்து கரையேறச்செய்பவன்.

புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே. (2-8-1)

[புணை-தெப்பம், புணைவம்-தெப்பம் போன்றன்.]

194. ஸுபர்ண: அழகிய இறகுகள் உடைய ஹம்ஸம். ஸம்ஸாரமாகிய கடலைக் கடக்க உதவுமவன்.

நீந்தும் துயர்ப் பிறவி (2-8-2)

[நீந்தும்-நீத்தும், கடத்தும்]

195. புஜகோத்தம: வ்யூஹத்தில் முதலில் தோன்றிய பத்மநாபன், திருவனந்தாழ்வான் மேல் சயனித்திருப்பவன்.

அணைவது அரவணைமேல் (2-8-1)

196. ஹிரண்யநாப: உலகங்கள் தோன்றுவதற்குக் காரணமான பொன்மயமான திருநாபி வாய்ந்தவன்.

அப்புண்டரீகக் கொப்பூழ்ப் புனற்பள்ளி
அப்பனுக்கே (7-1-11)

197. ஸுதபா: சிறந்த ஞானமே திருமேனியாக உடையவன்.

நிறைஞானத்தொரு மூர்த்தி (4-8-6)

198. பத்மநாப: திருநாபியில் தாமரை மலர் வாய்ந்தவன்.

தாமரை உந்தி தனிப்பெருநாயக (திருவா. 1)

199. ப்ரஜாபதி: இந்தக் கமலத்தில் தோன்றிய பிரமன் முதலான ஜீவர்களுக்குத் தலைவன்; இதில் தோன்றிய பிரமனுக்கும் பிரமன் படைத்த ஜீவர்களுக்கும் காரணமானவன்.

......கொப்பூழ்ச் செந்தாமரைமேல் திசைமுகன்
கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும்
(5-10-8)

(தொடரும்)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.



## கூ

கூகை - கோட்டான்
கூச்சம் - பயம்; கூசுகை
கூச்சுமுறை - கூசவேண்டும் முறை
கூட்டரவு - சமுதாயம்; கூட்டம்
கூட்டரிய திருவடிகள் - பெறுதற்கரிய திருவடிகள்
கூட்டுதல் - உபதேசித்தல்
கூட்டோடே கொடுத்தல் - சரீரத்தோடே கொடுத்தல்
கூடம் - சம்மட்டி; வஞ்சனை; பொய்
கூடல் - மதுரை; பாண்டியன் படை வீடு; குறிபார்க்கும் சுழி; சுழி கீறுதல். கூடலாவது நாயகி யானவள் வட்டமாகக் கோட்டைக்கீறிச் சுழிச் சுழியாகச் சுற்றும் சுழிகள் சுழித்து எண்ணுகையில் இரண்டு சுழி யாகக் கூடினால் நாயகன் வந்து கூடுகையும் இல்லாமல் போனால் கூடாமையும் என்று கொண்டு சுழிப்பாள். அதற்குக் கூடல் என்று பெயர். மணல் முதலானவைகளாலே வட்டமாகக்கீறிப் பார்ப்பதையும் சொல்லுவர்.
கூடலூர் - ஆடுதுறைப் பெருமாள் கோயில்; 108 திவ்ய தேசங்களுள் ஒன்று. தேவர்கள் கூட்டமாக வந்து பெருமாளை சேவிக்கும் ஸ்தலமாகையால் கூடலூர் என்று பெயர் வந்தது.
கூடுகிடக்க - கூடு-கத்தியுறை அதுகிடக்க-இருக்கையில்
கூடுகொண்டது - அழிந்தது.
கூடுபூரிக்கை - குவிக்கை; கூட்டைப் பூரிக்கை
கூத்தவப்பன் - கூத்தையுடைய பெரிய உதவியாளன்
கூத்துவந்தாடி - கூந்து உவந்து ஆடி
கூநீர்மதி - கூன் வளைவாய் அத்தாலே மண்டலாகாரத்தைச் சொல்லுகிறது
கூம்பு - கொடிமரம்; கொம்பு
கூமாறு - அழைக்கும்படி
கூய்ப்பணி கொள்ளே - கூவி, ஏவி, பணி கொள்ள வேணும், கூவுதல்-ஏவுதல்
கூர்க்கப்பார்த்தல் - கொடுமையாகப் பார்த்தல
கூர்மழை - அதிகமான மழை; அடைமழை
கூரம்பன் - அம்பின் கூர்மையையுடையவன்; கூரான அம்பை உடையவன்
கூவிகிலீர் - அழைக்கிறிலிகோள்
கூவியர் - மடையர்; சமைப்போர்
கூழ்த்தல் - சந்தேகித்தல்
கூழாட்கள் - 'சேரோம்' என்று சொல்லுகைக்கே தகுதியுடையார்
கூழாட்படுதல் - சோற்றுக்காக யாரேனும் தன்னை எழுதிக்கொடுத்து அகப்படுதல்
கூழைப்பார்வை - கள்ளப்பார்வை
கூழைவால் - கூழையான குட்டையான வால்; கூழைப்பாம்பு போல
கூற்றுத்தாய் - கைகேயி; கூற்றம்-யமன்

போன்ற தாய்

கூறுசெய்வார் - நெல்முதலிய தானியங்களைப் பங்குபோடும் அதிகாரிகள்; மணியக்காரர்

கூறைப்பை - துணி வைக்கும் பை, கூறையிருக்கிற பை - புடவை வைக்கும் பை.

கூன் தொழுத்தை - கூனியாகிற அடியாட்டி

கூனல் சங்கம் - வளைந்த சங்கு; பகவானை அநுபவிப்பதால் வந்த செருக்காலே வளைந்து இருக்கும் பாஞ்சசன்யம்

கூனி - மந்தரை.

கூனிகுயம் - அரிவாள்

## கெ

கெடுவாய் - சீ கெட்டே, சீ கெட்டான் அவன் என்பது போல கெடுவாயும் பேச்சுவழக்கு

கெருடர்கள் - கருடனைப்போல சிறகையுடையவரான கந்தர்வர்களைச் சொல்லுவர்.

கெழு விசும்பு - நெருப்பு காற்று; நீர் நிறைந்த ஆகாயம்

## கே

கேசரம் - உளைமயிர், பிடரி மயிர்

கேட்கின்றனகள்- கேட்கிறவை

கேட்குறுள் - கேட்க உருள், கேட்பதில்லை இவள்

கேட்டார் வாய்-கேட்டல் நேரில் பார்ப்பவர்களன்றிக்கே கேட்டவர்களுமன்றிக்கே கேட்டவர்கள் வாயிலிருந்து கர்ண பரம்பரையாகக் கேட்பது

கேட்டிருந்தேயும்- கேட்டிருக்கச் செய்தேயும்

கேட்டே கிடத்-தியோ கேட்டும் உறங்குகிருயோ

கேட்டேயும் - கேட்கும்போது; கேட்டும்

கேடகம் - பரிசை-வட்டி; பாசறை மலைகளை அடுத்த ஊர்

கேழ்பவர் - நனமையையுடையவர்; கேழ்பு-நன்மை; கேழ்-அழ்காய் அத்தாலே நன்மையைச் சொல்லிற்று

மகள்வன் - நாயகன்; தோழன்

கேள்வி - சப்தம்; ஆசார்ய உபதேசம்

கேளி - மங்கையர் விளையாட்டு

## கை

கை - விரல் சரடு, கைபுடை கோதை கைகட்டியாகும் என்று நிகண்டு. மேளகாரர் போலே வில்லாளிகளும் விரலில் காயம் ஏற்படாதபடி சரடு கட்டுவர்

கைக்கிளை - ஒருதலைக்காமம்; இசை ஏழினுள் ஒன்று

கைக்குறி யாப்பை - அகப்பையாலே கடன் வாங்குதல்

கைக்கூட்டன் - காவற்காரன்

கைக்கோளாண்டி - கங்கெத்துவாடு என்பது தெலுங்கு. அதாவது பெருமாள் மாட்டுக்காரன். எருதைக் கைக்கொண்ட ஆண்டி

கைகண்ட யோகம் - கைகண்ட பலன் என்பது போல கைகண்ட உபாயம்

கை கரவேல் - கொடை மாறவேண்டா கை-கொடை

கைகலந்துண்ணுதல் - இரண்டு கையாலும் உண்ணுதல்

கைச்சதும் புளிச்சதும் - கசந்ததும் புளிச்சதும் பித்தளை பாத்திரத்தில் வைத்த மோர் முதலியவை. கச்சது என்பது கசந்தது கைச்சது என்றே பொருள்.

கைச்செந்தீ - சூளிலே கொளுத்திக்கையிலே எடுத்துச்செல்லும் நெருப்பு. தெலுங்கில் சூளி-வெலுதுருகர்ர என்பர். சூள்-நெருப்பு அல்லது கொள்ளிக்கட்டை

கைசெய்அப்பாலது - கைத்தொழிலுக்கு அப்பாலதான. கை செய்கையாவது சித்திரமாக எழுதுகை. பாலது-தன்மையாக உடையது.

கைதலைபூசவிட்டால் - பூசல் பொருந்துதலாய் தலையிலே பொருந்தினால், அஞ்சலி பண்ணினால், தலையிலே கை வைத்துக் கூப்பிட்டால்.

கைதொடன் - கைவிடாதவன்

கைதொடுமானம் - உதவி

கைந்நாகம் - கையை வுடைய நாகம் யானை

கைந்நிரை - கைவிளக்கு

கைப்பாணியிடுதல் - மணி ஆசனப் பலகை இடுதல்

கை புனைதல் - கை கூப்புதல்

கைம்மா - கையுள்ள மா-யானை; பாயும் மா பாய்மா-குதிரை.

கைப்புலி - யானை

கைம்மான மத-யானை துதிக்கையின் மிடுக்காலே எல்லாவற்றையும் தூக்கி அடித்துப் போடுகிறேம் என்றிருக்கிற பெருந்தன்மையுடைய யானை

கையடியுண்டு - ஈடுபட்டு

கையடைப்பாக்குகை - கையில் ஒப்படைக்கை;

கை ஒழிந்தபோது - தன்வேலை முடிந்தபிறகு

கையோலை - ஞாபகச்சீட்டு

கையார் சக்கரம் - திருவீதி சோதனை, உற்சவத்திற்கு முன்நாள் சேனைமுதலியார் வீதியில் புறப்படுகை

கைவண்ணம் தாமரை - வண்ணம் - நிறம். கைக்குத் தாமரையோடு ஒப்பு சொல்லுதல், அதாவது அல்லி போலே உள்ளங்கை; தூது போலே ரேகைகள், உயர்ந்த வாசனை, மென்மையான உணர்ச்சி, புற இதழ் போல சியாமமான புறங்கையில் பசுமை- இப்படியான லக்ஷணங்களைச் சொல்லுவதாகும்.

கைவளர்க்கு மழலாளர் - தட்சஷணை கொடுத்து ஹோமம் பண்ணுவிக்காமல் தன் கையால் வளர்த்த அக்நியையுடையவர்.

கை வாய்க்கால் - சிறு வாய்க்கால்

கைவாரம் - வாழ்த்துதல்; மேல் வாரம், குடிவாரம் போலே கைவாரமும் ஒன்று. ஒருபாகம்.

கை வாளையில் தீர்த்த எம்பெருமான் - வெற்றிலைப்பையில் உள்ள ஸாளக்கிராமப்பெருமாள்

கைவைக்கை - ஆரம்பிக்கை

## கொ

கொக்கின் பழம் - மாம்பழம்; கொக்கு என்று மாவுக்கும் பெயர்

கொக்குவாயும் படுகண்ணியும் - ஆபரணத்தைப் பூட்டுவதற்கு உரிய கண்ணியும் அதில் செருகும் கொக்கியும். ஆபரணங்களின் பூட்டுவாய்.

கொங்கன் - சேரன்; கொங்குநாட்டுக்காரன்

கொங்கும் குடந்தை - கொங்கு மாறாத சோலையை உடைய குடந்தை. கொங்கு என்று மேற்குத் திக்காய் அது எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடமாய் அத்தால் வந்த மேன்மையையுடைய திருக்குடந்தை என்னும் திவ்ய தேசமாகும்.

கொங்கைச் சிறுவரை - முலையாகிற சிறுவரை. முலைமலை. கொங்கை-முலை, சிறுவரை-சிற்றிடை

கொட்டாரம் - ஸ்ரீரங்கம் கோயிலில் நெல் முதலிய தானியங்கள் வைக்கும் இடம்

கொட்டுத்தழும்பு - மண்வெட்டி பிடித்து வெட்டி கையில் ஏறின தழும்பு

கொட்டைத் தலைப்பால் - கொட்டை - பஞ்சுச் சுருள், அதைப்பாலிலே தோய்த்து அதனுடைய தலையை-நுனியைத் தாய் முலைபோலே உண்ணக் கொடுப்பது. இப்போது கண்ணாடிப் புட்டியில் ரப்பர் வைத்து குழந்தைகளுக்கு வாயில் கொடுப்பது போன்று அக்காலத்தில் பால் தோய்த்த பஞ்சை உருட்டிக் கொடுத்து வந்தனர்.

கொடீர் - கொடுக்கிறிரீர்

கொடுக்கும் கொய்சகமும் - கொடுக்கு-முன்றானை, நுனி, தலைப்பு, கொய்சகம்-கொசாம், கொசவம்

கொடுந்தொழுத்தை - கூனி, கொடியளான வேலைக்காரி

கொடுவைப்பசு - பொல்லாத பசு

கொண்டக் கோல் - மடுக்களில் பள்ளங்களுக்கு அடையாளமாக நடுகிற கோல் அர்சவதாரத்துக்கு கொண்டக்கோல் நாட்டின இடம் திருமலை என்பர் பூர்வர்கள்.

கொண்டகுதை - கொண்ட முயற்சி

கொண்டலுந்துயர்வேங்கடம் - மேகங்களைச் சென்று தள்ளும்படி அவ்வளவும் வளர்ந்த சிகரங்களையுடைய திருமலை

கொண்டாட்டு - கொண்டாடுகை - கொண்டாட்டம்

கொண்டை - மயிர் முடியிலுள்ள மாலை

கொண்ட கோதை - கொண்டை-மயிர்முடி

கொண்மாட்டாது. கொள்மாட்டாது - கொள்ளமாட்டாமல்

கொத்துத்தலைவன் - துர்யோதனன்; இக்கொத்துக்கெல்லாம் நானே தலைவன் என்று பாரிப்பவன்.

கொத்தை - வேகாதது; குற்றமுள்ளது

கொதுகலம் - மழலைக்கொஞ்சுதல்

கொந்தளம் - சிலுகிடுகை - சண்டையிடுகை

(தொடரும்)



# மல்லிநாடு ஆண்ட மடமயில்

திரு. வ. கோவிந்தன் - புதுப்பேட்டை

ஆண்டாள் பூமி பிராட்டியின் அவதாரமாய்த் தோன்றியவள். ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாருடைய துளசித்தோட்டத்தில் திருதுழாயின் மண்ணில் ஓர் அழகிய குழந்தையாக வெளிவந்தாள். பிள்ளை பேறற்ற பெரியாழ்வாரால் எடுத்து வளர்க்கப்பெற்றாள். இளமைப் பருவத்திலேயே கண்ணபிரானிடம் பக்தி கொண்டாள். வடபெரும் கோயிலுடையானுடன் தழுவித் திளைக்க வேண்டும் என்ற ஆற்ருமையுடையவளானாள்.

பருவ வயதை எட்டியவுடன் 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்றும் உறுதி பூண்டாள். அவளுடைய விருப்பம் சற்றும் கைகூட்வில்லை. எனவே அதற்கு என்ன வழி என்று ஆராயத்தொடங்கினாள். ஆய்பாடிப் பெண்களெல்லாம் தம் எண்ணப்படி அப்பெருமானுடன் கலந்து மகிழ்ந்திருந்தனர் என்பதை உணர்ந்தாள். அந்தத் தலத்தைத் தரிசிக்கலாம் என்ருலோ, தான் பெண் பிள்ளையாய் இருந்த காரணத்தினால் அங்கு நடந்து சென்று காண முடியாத நிலையை எண்ணி வருந்தினாள். எனவே வில்லிபுத்தூரை ஆய்பாடியாகவும் வடபெருங்கோயிலையே நந்த கோபர் இல்லமாகவும் தன்னை கோபியர்களில் ஒருத்தியாகவும் கற்பனை செய்து கொண்டு பாவை நோன்பு நோற்கத் தொடங்கினாள்.

அவள் பாடிய திருப்பாவை, கண்ணபெருமான் அருளிய கீதையினும் மேம்பட்டதாகும். ஏனெனில் அது அர்ச்சுனன் ஒருவனுக்காக பரந்தாமனால் அருளப்பட்டது. ஆனால் இத்திருப்பாவையோ உலக மக்கள் யாவரும் உய்தி பெறும் பொருட்டு ஓதி வைத்தது.



அதுமட்டுமின்றி கீதையானது வரிசையாகக் கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் போன்றவற்றை விளக்கிப் பின்னர் இறைவனை உபாயமாகப் பற்றுவதே சிறப்புடையது என்று கூறுவது. ஆனால் இத் திருப்பாவையோ முதற் பாசுரம் முதற்கொண்டு இறைவனே உபாயமானவன் என்று வலியுறுத்திக் கூறுவது. எனவே இது வேதத்தினும் மேலானது என்று ஆன்றோர்களால் கருதப் படுகின்றது.

பாதங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும்
கோதை தமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத
மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

எனவே இப்பாசுரத்தில் திருமந்திரம் துவயம் போன்றவற்றின் சாரகமாகக் காணப்படுகின்றது. உயிர்களுக்கும், இறைவனுக்கும் உள்ள தொடர்பினை இப்பாடல்கள் தெள்ளத்தெளிய விளக்குகின்றன. அத்துடன் இறைவனுடன் உயிர்கள் கலந்திருப்பதால் உண்டாகும் இன்பம் எத்தகையது என்பதையும் இவள் பாடல்கள் தெரிவிக்கின்றன.

ஆண்டாள் என்ற பெயரே மிகவும் சிறப்புடையது. வடபெரும் கோயிலுடையானை ஆண்ட கோதையே ஆண்டாள் என்ற பெயரினைப் பெற்ருள். மல்லி என்ற பெயருடைய அரசிக்குப் பின்னர் ஆண்டாள் தோன்றினாள். எனவே 'மல்லி நாடு ஆண்ட மடமயில்' என்று போற்றப்பட்டாள். இதனைப் பின்வரும் நாச்சியார் திருமொழித்தனியன் பாடல் ஒன்று தெளிவாகத் தெரிவிக்கின்றது.

அல்லிநாள் தாமரைமேல் ஆரணங்கின்
இன் துணைவி
மல்லி நடாண்ட மடமயில்-
மெல்லியலாள்

ஆயர் குலவேந் தனாகத்தான்
தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு.

"தென் புதுவை என்று போற்றப்படும் ஸ்ரீவில்லிப்புத்தூரில் பெரியாழ்வாரின் அன்பு மகளாய் வளர்ந்த ஆண்டாள் மல்லி நாடாண்ட பெருமை உடையவள். ஆயர் குலத்தோன்றலாகிய கண்ணபெருமானின் இதயத்துள் இடம் பெற்றவள்" என்று இத்தனியன் ஆண்டாளைப் பற்றிச் சிறப்புடன் கூறுகின்றது.

கோதை இளமை முதற்கொண்டே ஞானம் நிரம்பப் பெற்றவளாய்த் திகழ்ந்தாள். அருள் வடிவம் உடையவள். பக்தியின் மூலம் உயர்ந்த சாதனையைப் புரிய முடியும் என்று நிரூபித்தவள். தான் எண்ணியபடி ஆண்டவனையே மணாளனாக அடைந்தவள். தேவர்களுக்கும் கிட்டாத பெரும்பேற்றினை மனிதப்பிறவியில் அடையலாம் என்று காட்டியவள். நம்முடைய வைராக்கியத்தின் மூலம் எதையும் சாதிக்கமுடியும் என்று வழிகாட்டியவள்.

இவள் இயற்றிய திருப்பாவை மார்கழியில் பெண்கள் நோற்கும் நோன்பினை மையமாக வைத்து எழுதப்பட்டதாகும். பெண்கள் எல்லோரும் மார்கழிக் காலையில் துயில் எழுந்து, பின்னர் கண்ணபெருமானைச் சென்றெழுப்பி அவனை அழைத்துக் கொண்டு சென்று, அவனுடன் நீராடி மகிழ்ந்து நோன்பு நோற்பது போன்று அமைந்துள்ளது. இப்பாடல் முழுமையும் ஆயர் குலப்பெண்களுக்கு கண்ணபிரான் மேல் கொண்ட காதலே வெளிப்படுதல் போன்று அமைத்துள்ளாள்.

மழை பெய்ய வேண்டும் என்பதற்காக, ஆய்பாடிப் பெண்கள் கண்ணனைத் தலைவனாகக் கொண்டு நோன்பு நோற்பது வழக்கம். இதன் அடிப்படையில் எழுந்ததே இப்பாசுரங்கள். இது எல்லோரும் அறிந்த வெளிப்படையான கருத்து. ஆனால் இதில் 'ஆத்மாவானது இறைவனுடன் கூடி இன்புறுதல் வேண்டும். அவனுக்குக் குற்றேவல் செய்து பேரின்ப நிலையை எய்த வேண்டும்' என்பதே இப்பாடல்களின் உட்கருத்தாகும். எனவே ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுப் பாடிய ஆண்டாள், எம்பெருமானுடன் கூடி நம்மையும் ஆண்டு கொண்டிருக்கின்றாள்.

அவள் சூட்டிய பூமாலையைப் போன்றே பாமாலையும் சிறப்புடையது. இதன் மூலம் பெருமானுக்கு ஒரு புதிய நறுமணம் கிடைத்தது. அவளுடைய பக்தி மிக்கக் காதலானது சுத்த பிரேமையின் காதலாகும். எனவே இவள் பாடிய திருப்பாவையைப் பாராயணம் செய்வோர் நித்ய லீலா விபூதிகள் கொண்ட ஸ்ரீமந் நாராயணனின் திருவருளைப் பெறுவர் என்பது திண்ணம்.

எனவேதான் ஆண்டாள் பிறந்த ஸ்ரீவில்லிப்புத்தூருக்கும் ஏற்றம் உண்டாயிற்று. அவள் பிறந்த அவ்வூரைப் பலபடியாகப் போற்றிப் பாடியுள்ளனர். பெருமான் கோயில் கொண்ட ஊராக அவ்வூர் திகழ்கின்ற போதிலும் அதனை இரண்டாம் நிலையில் வைத்து கோதை பிறந்ததையே சிறப்பித்துப் பாடுகின்றார் ஒருவர்.

கோதை பிறந்த ஊர்; கோவிந்தன்
வாழும் ஊர்;
சோதி மணிமாடம் தோன்றும் ஊர்
நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகள்
ஓதும் ஊர்
வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்.

என்று அப்பாடல் தெரிவிக்கின்றது.

"கோதை பிறந்த ஊர் கோவிந்தன் கோயில் கொண்ட இடம், அழகிய மாடங்களை உடைய சிறப்புடைய ஊர். நீதியுடைய பக்திமான்கள் வாழ்கின்ற ஊர், எப்பொழுதும் நான்கு வேதங்களும் ஒலித்துக்கொண்டே இருக்கும் ஊர். அது வேதத்திற்குத் தலைவனாகிய திருமகள் கேள்வன் வாழ்கின்ற ஸ்ரீவில்லிப்புத்தூரே ஆகும்" என்பது இப்பாடலின் கருத்தாகும்.

எனவே கோதை பிறந்த ஊர் வில்லிபுத்தூர் என்று குறிக்கப்பெற்றாலும் இதனை மல்லி நாடு என்று அழைக்கப்படும் வழக்கமும் உண்டு என்பதை முன் கண்ட 'மல்லி நாடாண்ட மடமயில்' என்ற வரிகள் மூலம் அறிகிறோம். அதுமட்டுமின்றி மல்லிநாடு என்ற பெயர் மற்றோர் இடத்திலும் கையாளப்படுவதைக் காணமுடிகின்றது.

ஸ்ரீ ஆண்டாள் வாழித்திருநாமத்தில்,

மருவாரும் திருமல்லி வளநாடி
வாழியே!
வண்புதுவை நகர்க் கோதை
மலர்பதங்கள் வாழியே

என்று காணப்படுகின்றது. ஆகவே வில்லிப்புத்தூரை அன்னவயில் புதுவை என்றும், மல்லிநாடு என்றும் அழைக்கும் வழக்கம் உண்டு என்பதை இதன்மூலம் அறிகிறோம்.

மல்லிநாடு ஆண்ட மடமயில் என்று போற்றப்பட்ட ஆண்டாள் நம் எல்லோர் உள்ளங்களிலும் இருந்து இன்றும் ஆண்டு கொண்டு இருக்கின்றாள்.

************

# கண்ணனுக்கு ஒரு கடிதம்

செல்வி. சோ.கி. கல்யாணி - மதுரை.



தன் அழகாலும், குணங்களாலும், வீரத்தாலும் அனைவரையும் வென்ற கண்ணபிரான், தான் வென்ற தன்மையினாலேயே அவர்களை மகிழ்வூட்டுகிறுன். பெருது பெற்ற பெருஞ் செல்வம் போல் அத்தன்மைகளால் மகிழ்ந்த அவனடியார்கள் உண்பதும் உறங்குவதும் உடுப்பதும் எடுப்பதும் கண்ணன்! எனப் பிதற்றித்திரிகின்றனர். கண்ணன் என்ற பேரமுதினை அள்ளி அள்ளி உண்கின்றனர். பல்லாண்டு காலம் அவர்களுக்கு ஒருநாள் போன்று சிறுமைப்படுகிறது. அமுதாயினும் அளவுக்கு மிஞ்சினால் நஞ்சன்றோ! இதையுணர்த்த வேண்டித் தன்னடியார்களிடம் இருந்து, சிலகாலம் கண்ணன் மறைந்து விடுகின்றுன்.

வெளிச்சத்திலிருந்து இருட்டில் தள்ளப்பட்ட நிலை போன்று அவனடியார்கள் நிலைகலங்கி மயங்கி நிற்கின்றனர்; செய்வதறியாது திகைக்கின்றனர். தமதுயிரைப் போக்கிப் கொள்ளவும் துணிகின்றனர். கண்ணனில்லாத வேற்றுலகில் என்ன இன்பம் கிடைக்கப்போகிறது? என்று எண்ணி அம்முயற்சியைக் கைவிட்டு விடுகின்றனர். துன்ப உலகில் சுழலும் அவர்களுக்கு ஒரு நன்னாளும் வருகின்றது. கண்ணன் வேற்றூரிலே இருப்பதாக அவர்களுக்குத் தகவல் கிடைக்கிறது. கண்ணன் என்ற அமுது வேண்டிப் பசித்து நிற்கும் அவ்வயிற்றில் அந்தச் செய்தி பாலை வார்க்கிறது. எனினும் கண்ணனைக் கண்ட அக்கண்கள் மிகவும் பிடிவாதம் உடையனவாய் விட்டன. மனமோ ஓயாது அவனைப் பெறுவது எவ்வாறு? என்று சிந்திக்கின்றது. எங்கு காண்பேன்? எப்படிக் காண்பேன்? என்று வாயும் ஓயாது பிதற்றுகிறது. இவர்களின் நிலை கண்டு வருந்திய ஒருவர், "அடியார்களே! உங்கள் வருத்தத்தை எல்லாம் ஒரு கடிதத்தில் எழுதித்தாருங்கள். நான் கண்ணனிடம் சென்று தருகிறேன். கடிதத்தைப் படித்தவுடன் கண்ணன் உங்களைக் காணக்கட்டாயம் வருவான்" என்கிறுர். கண்ணனின் அடியார்களும் அவரின் யோசனையை உகப்புடன் ஏற்றுக் கொள்கின்றனர். ஒரு வாரம் கழித்துத் தான் வந்து கடிதத்தைப் பெற்றுக் கொள்வதாக அவ்வடியார் கூறிச் சென்று விடுகிறுர். ஒரு வாரம் கழித்து அவ்வடியாரும் வருகிறுர்.

முதன் முதலாகப் பேதைப் பெண் என்று எண்ணிப் பக்த மீராவை அணுகுகிறுர் அவர். "அம்மா! கடிதம் எழுதினாயா? எனக்கேட்கிறுர். மீரா தன் பதிலை இவ்வாறு பாடலாகக் கூறுகிறுர்.

"அவனுக்குச் செய்தி எழுதி
விடுக்கவும் இல்லேன்
எழுதுகோல் எடுத்தால்
கைநடுங்குகிறது
கண்களில் வெள்ளம் புரண்டது

நெஞ்சினில் இருப்பதைச் சொல்ல
வல்லேனோ?

முயன்றும் முடியவில்லை. இருதலைக்
கொள்ளி எறும்பின்நிலை!

ஹரியிடம் சென்று இது புகன்றிடு
தோழி!

மீரா பிரபு, கிரிதர நாகரா!
நின்திருப்பாதத் தாமரையருகினில்
அனுக்கத் தொண்டாய்
என்னை அமர்த்திக் கொள்வாய்"

மீராவின் பதிலைக் கேட்ட பின்பு, அப்பெரியவர் ஞானியான கபீர்தாசிடம் செல்கிறார். 'ஐயா, கடிதம் தாயாரா?' எனக் கேட்கிறார், அவரோ,

"அன்பன் வெளியூர் தன் ில் லன
இருப்பின்
அவனுக்கு எழுதுவேன் கடிதம்
என்னுள்ளே, கண்ணுள்ளே,
எங்குமிருக்கும்
என்றன் தலைவனுக்கு எப்படி
எழுதுவேன் கடிதம் இவ்வேழை!"

என்று கூறுகிறார். இறுதியாக அவ்வடியார் குருடரான சூர்தாசிடம் சென்று, "ஐயா! கடிதம் எழுதினீர்களா!" எனக் கேட்டார். அவரோ, "ஐயா, அடியவரே! கண்ணன் எங்களுக்கு அனுப்பிய செய்திகளால் இங்குள்ள கிணறுகள் எல்லாம் நிரம்பிவிட்டன. அவன்தான் இன்னும் வரவில்லை. நாங்கள் அனுப்பிய செய்திக்குக் கூடவா அவன் விடை அனுப்பக்கூடாது? கண்ணன் இருக்கும் ஊருக்குச் சென்ற தூதுவர் அனைவரும் எங்களை மறந்தே போய்விட்டனர். ஒருசமயம் கண்ணனே அவர்களுக்குப் பாடம் கற்பித்து எங்களை மறக்கச் செய்து இருப்பான். அல்லது அவர்கள் வழியிலேயே இறந்திருப்பர். இல்லை! ஒருவேளை கண்ணன் எங்களுக்கு எழுதியனுப்பிய கடிதங்கள் மழையில் நனைந்து இருக்கலாம். எனவே எழுத்துக்கள் அழிந்து போயிருக்கலாம். அல்லது அவனிருக்கும் ஊரிலுள்ள எழுதும் மை எல்லாம் தீர்ந்து போயிருக்கலாம். எழுதுகோல் செய்யப்படும் குச்சிகள் அனைத்தும் காட்டுத்தீயில் எரிந்து போயிருக்கலாம். கடிதம் எழுத வேண்டிய காகிதம் எல்லாம் தீர்ந்து போயிருக்கலாம். எவ்வாறாயினும், நான் எழுதியனுப்புவேன் என்று நினைத்தால், நானோ குருடன்! எனது இமைகள் என்னுங் கதவுகள் மூடிவிட்டன! நான் என்ன செய்வேன்?" என்று கூறினார்.

இவர்களின் நிலை கண்டு வருந்திய அவ்வடியார், தாம் எப்படியேனும் இவர்களின் நிலையை விளக்கி ஒரு கடிதம் எழுதிக் கண்ணனுக்கு அனுப்பிவிட வேண்டும் என்று முயன்றார். என்ன ஆச்சரியம்! மீராவின் பாடல் இவரது பதிலாக எனக்குக் கேட்கிறது. ஆம்!

"அவனுக்குச் செய்தி எழுதி
விடுக்கவும் இல்லேன்
எழுதுகோல் எடுத்தால்
கை நடுங்குகிறது
கண்களில் வெள்ளம் புரண்டது
நெஞ்சினில் இருப்பதைச் சொல்ல
வல்லேனோ?
முயன்றும் முடியவில்லை. இருதலைக்
கொள்ள எறும்பின் நிலை!
ஹரியிடம் சென்று இது புகன்றிடும்
தோழி!
மீரா பிரவு, கிரிதர நாகரா!
நின்திருப்பாதத் தாமரையருகினில்
அனுக்கத் தொண்டாய்
என்னை அமர்த்திக் கொள்வாய்"

++++

# விநாயகப் பெருமான் தோற்றம்

| கணபதியின் உருவம் | | பரவசமூட்டும் தத்துவமாகும் |
|---|---|---|
| நாபி | - | பிரும்ம ஸ்வரூபம் |
| நேத்ரம் | - | சிவமயம் |
| இடபாகம் | - | சக்தி வடிவம் |
| வல பாகம் | - | சூரிய ஸ்வரூபம் |

**ஐந்து திருக்கரங்கள் :**

கும்பம் ஏந்திய கை ஆக்கும் தொழிலையும், மோதகம் ஏந்திய கை காத்தல் தொழிலையும், அங்குசம் ஏந்திய கை அழித்தல் தொழிலையும், பாசம் ஏந்திய கை மறைத்தல் தொழிலையும், தந்தம் ஏந்திய கை அருள் தொழிலையும் புரிகின்றன. இப்படியாக ஐந்தொழில் புரிந்து உயிர்களுக்கு அருள் புரிகிறார் விநாயகர் என்பதைக் காட்டவே விநாயகருக்கு ஐந்து திருக்கரங்கள் அமைந்துள்ளன.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே

திருமந்திரம்

அனுப்பியவர்: கமலா மாரியப்பன் - கோவை.

முதல் மனுவான சுவயம்பு மனுவானவர் தன் தேவியான சதரூபையுடன் பிரம்ம தேவரை நோக்கித் தாங்கள் வசிப்பதற்கு இடம் காட்டும்படி கேட்டுக் கொண்டனர். பூலோகம் ஜலப் ரளயத்தில் மூழ்கிக் கிடந்தது. காரணம் என்னவெனில் ஜய, விஜயர் என்ற இரு துவார பாலர்கள் நான்கு குமாரர்களி டம் பெற்ற சாபத்தால் பூமியில் வந்து காச்யபர் என்ற முனிவ ருடைய மனைவியான திதி என் பவளிடம் இரண்யகசிபு, இரண் யாட்சன் என்ற பெயர்களில் பிறந்திருந்தனர்.

இரண்யாட்சன் என்பவன் பிரம்மதேவரிடம் வரங்களைப் பெற்று மகாபலசாலி யாகி தோள்கள் தினவெடுக்க யுத்த வெறிப் பிடித்தவனாக தேவர்களைத் தேடிக்கொண்டு அலைந்தான். அவனுடைய பயங்கரமான ரூபத்தைக் கண்ட தேவர்கள் பயந்து போய் ஓடி ஒளிந்து கொண்டனர். பூமியி லும் ஆகாயத்திலும் தன்னை எதிர்க்கத் தக்கவர்கள் யாரை யும் காணாத இரண்யாட்சன் மேருபர்வதம் கடலில் குதித் ததைப் போல சமுத்திரத்தில் குதித்துப் பயங்கரமாகச் சப் தம் செய்தபடி மேற்குத் திசைக் குத் திக்பாலகனாகிய வருண

பிரம்ம தேவரும் பகவானிடம் இது குறித்துத் தியானித்தார்.

பகவான் ஸ்ரீவராக அவ தாரம் எடுத்து பூலோகத்தை நிலைநிறுத்துவதற்காக வேத யக்ஞ மய ரூபமுடையவரா கத் தோன்ற முயன்று வெண் ணிறமான சிறிய வராகமாக சிறு பூச்சி போல வந்து பிரம்மாண்டமான ரூபத்துடன் வளர்ந்தார். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். ரிஷிகள் வேத கோஷங்கள் முழுங்கியபடி வான வெளியெங்கும் வந்து கூடினர். சகல ஜீவராசிகளும் தமக்கு க்ஷேமமும் மங்களமும் உணடா கப் போகிறதென்று மகிழ்ச்சி அடைந்தன.



# ஸ்ரீ வராக கல்பம்

திருமதி. ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.





னின் சேனைகளை, அதாவது ஜல ஜந்துக்களைத் துரத்திக் கொண்டு வருணனின் பட்ட ணமாகிய விபர்வரியைச் சென் றடைந்தான்.

வருணனைப் பார்த்துக் குரூர மாக நகைத்தபடி "அடே வருணா! நீ பூர்வ காலத்தில் சகல ராட்ச ஸர்களையும் வென்று ராஜ சூய யாகம் செய்து லோக பாலக னாகக் கீர்த்தி பெற்றவன் அல் லவா? எழுந்துவா, என்னோடு போர் செய்" என்று மார்தட்டிப் போருக்கு அழைத்தான். பூமி யைப் பாதாளத்தில் பிடித்துத் தள்ளினான்.

ஸ்ரீமன் நாராயணன் என்ற திருநாமம் உடைய பகவான் நீர் மீது தாமரை இலை ஒன்று மிதக்கக் கண்டு ஏகார்ணவமான ப்ரளய லோகத்தில் பூமி மூழ்கி உள்ளது என முடிவு செய்தார்.

வருணனும் இரண்யாட்ச னைப் பார்த்துத் தன் கோபத்தை அடக்கிக் கொண்டு "அசுரனே நாங்கள் போர் செய்ய வேண்டும் என்ற உற்சா கமில்லாமல் இருக்கிறோம். உன் னோடு போர் செய்வதற் கென்றே விஷ்ணு மூர்த்தியான வர் வராக உருக்கொண்டு வந்து கொண்டிருக்கிறார். அவரைத் தேடிக்கொண்டு போ" என்றான்.

உடனே இரணியாட்சன் பயங்கரமாகச் சிரித்து ஆர்ப் பாட்டம் செய்தபடி "எங்கே அந்த வராகம்?" என்று குதித் தபடி எண் திசைகளும் எதிரொ லிக்க மலைகள் நடுங்க, கடல் கள் குமுற, சகல ஜீவ ராசிக ளும் பயந்து ஓடுங்க, கர்ஜித்த படி அலையலானான்.

ஈரேழு பதினாலு லோகங்க ளிலும் தேடியும் அந்த வராக

தத்தைக் கண்டுபிடிக்க முடியாத அசுரனை நாரதர் சந்தித்தார்.

அப்போது ஸ்ரீ வராக மூர்த்தி ஜலப் பிரளயத்தில் மூழ்கிக் கிடந்த பூமியை எடுத்துத் திரும்பவும் உத்தாரணம் செய்வதற்காக சமுத்திரத்தில் பிரவேசித்தார். பூமிதேவி அவரை மிகவும் பக்தியோடு "யாவற்றிற்கும் ஆத்மபூதனான உமக்குத் தெண்டனிடுகிறேன். என்னை உத்தரித்தருள வேண்டும்" என்று பிரார்த்தனை செய்தாள்.

இந்த விஷயத்தை நாரதர் இரண்யாட்சனிடம் கூற அவன் சிரித்தான். "நாரதரே! உமக்கென்ன பைத்தியமா பிடித்து விட்டது? பூமியைத் தூக்க எடுக்க யாரால் முடியும்?" என்றான்.

"அந்த வராகம் தூக்கிக் கொண்டிருக்கிறதே! நீயே வந்து பார்" என்றார் நாரதர்.

இரண்யாட்சனும் சென்று பார்க்க வராகமூர்த்தி ஆனவர் தமது கோரைப் பல்லின் நுனியினால் பூமியைத் தூக்கியபடி மேலே எழும்பிக் கொண்டிருந்தார். இரணியாட்சன் பயங்கரமாகச் சிரித்தபடி "ஓ வராகமே! காட்டில் சஞ்சரிக்கின்ற உன் இயற்கையான குணத்தை விட்டு ஜலத்தில் ஏன் பிரவேசித்தாய்? பிரம்ம தேவரால் பாதாள லோகவாசிகளான எங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்ற இந்த பூமியைத் தூக்கிக் கொண்டு எங்கே ஓடப்பார்க்கிறாய்?" என்றபடி தன் கதாயுதத்தைச் சுழற்றினான்.

வராக மூர்த்தி ஆனவர் தமது பராக்ரமத்தால் அந்தக் கதாயுதத்தைத் தூரத் தள்ளிவிட்டுப பூமியை ஜலத்தின் மேல் ஸ்தாபித்துத் தமது ஆதர்ஸ சக்தியால் அதை நிலைத்து நிற்கச் செய்து விட்டு இரண்யாசனை எதிர்க்கச் சித்தமானார்.



இருவரும் கோரமான யுத்தம் புரிந்தனர். பின்பு பகவான் இரண்யாட்சனைத் தன் சக்கர ஆயுதத்தால் கொன்று தன் திருவடி சேர்த்துக் கொண்டார். தான் மீட்ட தனது நாயகியான பூமிதேவிக்கு மீண்டும் ஆபத்து வராதபடி பூலோகத்திலேயே தங்கி இருந்து ரட்சிக்க நினைத்தார்.

எனவே ஸ்வாமி புஷ்கரணி என்ற தீர்த்தத்தின் கரையில் பூமிதேவியுடன் எழுந்தருளினார். தேவர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி உக்ர ஸ்வரூபம் தணிந்து அருள் வழங்கும் கனிந்த நோக்குடைய சாந்த ஸ்வரூபியாய்க் காட்சி அளித்தார். திருமலையில் கலியுக ஆரம்பத்தில் தங்க வந்த ஸ்ரீனிவாசருக்கு இடம் கொடுத்தது இவரேயாகும். இவருக்குத் தான் முதல் பூஜை நடத்தி பின்பே ஸ்ரீனிவாசருக்கு நடத்த வேண்டும் என்பது முறைமை.

மேலும் ஸ்ரீமுஷ்ணம் என்ற தென்னாற்காடு ஜில்லாவைச் சேர்ந்த முக்யமான க்ஷேத்திரத்தில் அம்புஜவல்லி நாயகனாக ஸ்வயம்புவாக எழுந்தருளி உள்ளார். இவர் போர் முடிந்து வியர்த்துக் களைத்த தீர்த்தமே நித்ய புஷ்கரணி ஆகும். இது அவர் ஸர்வாங்க ஸம்பந்தம் பெற்றது. இங்கு அவரது நாமம் ஸ்ரீபூவராஹ மூர்த்தி என்பதாகும். நாம் வாழும் இந்த கல்பம் அவரது பெயரால் ஸ்வேத வராஹ கல்பம் எனப்படுகிறது. ஸ்ரீமுஷ்ணம் 20 புராண ஸ்தலங்களில் ஒன்றாகும். மேலும் எட்டு ஸ்வயம்பு தலங்களிலும் ஒன்றாகும். அவரை துதிப்பிரியரான அவரை நாமும் துதித்து அவனருள் பெறுவோமாக! ※

## ருத்திரர்களும் ஆதித்தியர்களும்

மகாதேவன், அரன், உத்திரன் சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமன், பவன், கவாலி, சௌமியன் என்பவர்கள் பதினொரு ருத்திரர்கள் ஆவார்கள்.

தாத்துழி, சக்ரன், யமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், விலக்கமான், பூடனன், சவித்ரு, துலஷ்டா என்பவர்கள் பன்னிரு ஆதித்தியர்கள் ஆவார்கள்.

அனுப்பியவர்: ஆர். ராஜலக்ஷ்மி - திருச்சி.

# பகைவரும் போற்றும் பண்பாளன்

திரு. ஆர். நரஸிம்ஹன் - திருச்சி.

ஸர்வலோக சரண்யனான ஸ்ரீய: பதி ஸ்ரீமந் நாராயணனிடம் வேண்டியவன், வேண்டாதவனென்ற பாகுபாடின்றி எல்லா ஜீவராசிகளிடமும் அன்பும், கருணையும் இயற்கையாக (அவ்யாஜவத்ஸலத்வம்) விளங்குகிறது. அவன் ஸத்யகாமன், ஸத்ய சங்கல்பன், ஸர்வஞ்ஞன். அவனின்றி ஓர் அணுவும் அசையா. பரமபதத்திலிருந்தபடியே வான் இளவரசராகப் பரிபாலித்து வருகிறான். அவன் ஸர்வசக்தனானபடியால் அவனால் இயலாதொன்றுமில்லை. அவன் இந்த விபூதியில் அவதாரம் செய்துதான் விரோதி நிரஸனம் செய்யவேண்டுமென்பதில்லை. ஆயினும் "லோகவத்து லீலா கைவல்யம்" என்றபடி, ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் (லயம்) என்பது அவனுக்கு ஒரு விளையாட்டு. ஜீவாத்மாக்கள் தம்தம் கர்ம வசப்பட்டு நல்வினை, தீவினையாகிய கர்மாக்களைச் செய்து அவற்றின் பலனை அனுபவிக்கின்றனர். 'அவசர: ப்ரதீக்ஷ'னான ஸ்ரீபகவான், தன்னை நினைத்து அநந்ய கதியாகச் சரணடைபவர்களைக் கைதூக்கி விடுகிறான். ஸம்ஸார சாகரக் கடலைக் கடக்க உறுதுணையாக நின்று அவரவர் விரும்பும் பலன்களை அளிக்கிறான்.

அவனது அவதார விசேஷங்களின் முக்கியமான ப்ரயோஜனம் சாது பரித்ராணமும், தர்ம ஸ்தாபனமும்தான். ஸாதுக்களுக்கு இடையூறு விளைவிக்கும் அசுர, ராக்ஷஸ ப்ரமிருதிகளை நிரஸிக்க வெவ்வேறு அவசரங்களில் அவ்வப்பொழுது விபவாவதாரங்களை எடுத்து தன் சௌசீல்ய, சௌலப்ய, வாத்ஸல்யாதி குணவிசேஷங்களை எல்லோருக்கும் புரியும்படி காட்டிக் கொடுக்கிறான். தன்னை முழுக்க முழுக்க மனிதனாகக் காட்டிக் கொண்டு தர்மமே வடிவாகத் தோன்றியது ஸ்ரீராமாவதாரம். "ராமோ விக்ரஹவான் தர்ம:" ஸ்ரீசக்ரவரத்தித் திருமகன் ஒரு குணநிதி. அவனது கல்யாண குணங்களில் ஈடுபட்ட இளைய பெருமான் கூறுவதாவது: "அஹம் அஸ்ய அவரஜோ ப்ராதா குணைர்தாஸ்யம் உபாகத:"

அவனது குணங்களில் ஆழங்கால்பட்டு உருகின ஸ்ரீஆஞ்சநேயரும், "பாவோ நாந்யத்ர கச்சதி" என்கிறார். "எந்த ராமனை ஒருவன் பார்க்கவில்லையோ எவனை ஸ்ரீராமன் கடாக்ஷிக்கவில்லையோ அவன் நிந்திக்கப்பட்டவனாய், அவனது ஆத்மாவே அவனை நிந்தித்தபடி இருக்கிறான்" என்பது ஸ்ரீவால்மீகி வசனம். "ரமயதி இதி ராம:" என்ற வசனப்படி அவனது வடிவழகுக்குத் தோற்காதவர் யாருமில்லை. ஆழ்வாரும், 'நின் வடிவழகு மறவாதார் பிறவாதாரே' என்றார். ஸ்ரீபிராட்டியிடம் மஹதாபசாரப்பட்ட ராவணனும் அவனைச் சார்ந்த ராக்ஷஸர்களும் ஸ்ரீராமனது குணங்களால் ஈர்க்



கப்பட்டு இயற்கைக்கு மாறாக அவனை ஸ்தோத்திரம் செய்த தாக ஸ்ரீவால்மீகி கூறியுள்ளார். அவர்களுள் குறிப்பாக மாரீசன், சூர்பணகை, அகம்பனன் இவர்கள் ராமனைக் கொண்டாடிய விதத்தைச் சற்று உற்று நோக்குவோம்.

### மாரீசன் கண்ட ஸ்ரீராமனும் ஸ்ரீசீதையும்

ராமோ விக்ரஹவான் தர்ம: சாது:
சத்ய பராக்ரம: ।
ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய
தேவானாம் மகவானிவ: ।।
[III-37-13]

அப்ரமேயம் ஹிதத்தேஜோ யஸ்யஸா
ஜனகாத்மஜா ।
நத்வம் ஸமர்த்த: தாம் ஹர்தும்
ராமசாபச்ரயாம் வநே ।।
[III-37-18]

தஸ்ய ஸா ராஜஸிம்ஹஸ்ய
ஸிம்ஹோரஸ்கஸ்ய பாமினி ।
ப்ராணேப்யோபி ப்ரியதரா பார்யா
நித்யமநுவ்ரதா ।।
[III-37-19]

அஜாத வ்யஞ்ஜன: ஸ்ரீமாந்
பத்மபத்ர நிபேக்ஷண: ।
ஏகவஸ்த்ரதரோ தன்வீசிகி
கனகமாலயா ।।
[III-38-13]

ராமச்சஹி மஹா தேஜா
மஹாஸத்வோ மஹாபல: ।
[III-35-23]

"ஸ்ரீராமனே அறத்தின் நாயகன், சத்வகுண பரிபூர்ணன். சத்யம் தவறாதவன். தேவர்களின் தலைவனான இந்திரனைப் போன்று ஸர்வ ஜகத்துக்கும் நாயகன். அவனது ஒளியாக விளங்குபவன் ஸ்ரீஜனக நந்தினி. ஸ்ரீராமனின் கோதண்டத்துடன் கூட அருகிலிருக்கும் ஸ்ரீஜானகியைப் பிரிக்க உன்னால் இயலாது. எப்பொழுதும் ஸ்ரீராமகைங்கர்யத்தில் ஈடுபட்டிருப்பவளும் தனது உயிருக்கும் மேலான சீதை, அந்த புருஷோத்தமனும் சிம்ஹ கதியையுடைய ஸ்ரீராமனின் ப்ரியமான பார்யை. எப்பொழுதும் பொலிவுடனும், செந்தாமரைக்கண்களுடன் கூடினவன் கோதண்ட பாணி. பொலிவுடன் விளங்கும் மாலையை அணிந்தவன். அழகான கூந்தலுடன் கூடியவன். ராமன் தேஜோமயன். அமித பராக்ரமன், ஸத்வத்தோடு காட்சி தருபவன்" பாலகாண்ட ராமனைக் காட்டிலும், அரண்யத்தில் சீதாராமனாகக் காட்சி தரும் ராமனின் ஸ்வரூப, ரூப, விபவ, ஐச்வர்யாதிகளை உள்ளபடியே கூறும் மாரீசனின் பக்தியை என்னவென்பது!!

அடுத்தபடியாக, தண்ட கரண்யத்தில், பஞ்சவடியில் காதும், மூக்கும் அறுபட்டு, அவமானப்பட்ட நிலையிலும், ஸ்ரீராமனின் ரூபலாவண்யத்தை வர்ணிக்கிறாள் அரக்கியான சூர்பணகை:-

தீர்கபாஹு: விசாலாக்ஷ: சீரக்
க்ருஷ்ணாஜினாம்பர: ।
கந்தர்பஸமரூபச்ச ராமோ
தசரதாத்மஜ: ।।
[III-34-5]

சக்ரசாபநிபம்சாபம் விகிருஷ்ய
கனகாங்கதம் ।
தீப்தான் க்ஷிபதி நாராசான்
ஸர்பானிவ மஹாவிஷான் ।।
[III-34-6]

ப்ராதாசாஸ்ய மஹாதேஜா
குணதஸ்துல்ய விக்ரம: ।
அநுரக்துச்சபக்தச்ச லக்ஷ்மணோ
நாம வீர்யவான் ।।
[III-35-12]

அமர்ஷீ துர்ஜயோ ஜேதா விக்ராந்தோ
புத்திமான் பலி ।
ராமஸ்ய தக்ஷிணோ பஹு: நித்யம்
ப்ராணோ பஹிச்சர: ।।
[III-35-19]

ஸ்ரீராம லக்ஷ்மணர்களைக் கண்ட சூர்பணகை வர்ணிக்கும் விதம் உள்ளபடியே படம் பிடித்துக் காட்டுவது போன்றதாகும். "ஸ்ரீராமன் நீண்ட தோள்களையுடையவன், காது வரை நீண்ட கண்களையுடையவன். இடுப்பிலே மான் தோல் அணிந்து விளங்குபவன். தசரதனைப் போன்று பராக்ரமம் உடையவன். இந்திரனின் வில்லுக்கொப்பான வில்லினை உடையவன். தங்கப்பிடிபோட்ட வில்லை நாணேற்றி விஷநாகங்களுக்கொப்பான பாணங்களைப் பிரயோகப்படுத்துகிறவன். குணங்களால் ஈர்க்கப்பட்டு கைங்கர்யம் செய்யும் அவனது சஹோதரன் தேஜஸ் பொருந்தியவன். எப்பொழுதும் அண்ணனிடம் ஈடுபட்டவன். ராமபக்தன். லக்ஷ்மணன் என்று ப்ரசித்திபெற்ற ஒப்பற்ற வீரன். கோபிஷ்டன். எதிரிகளால் ஜெயிக்க முடியாதவன். அறிவாளி, பலசாலி, ராமனின் வலது கரம் போன்றவன். ராமனின் வெளியில் நடமாடும் உயிருக்கு இணையானவன் லக்ஷ்மணன்" என்னே ஒப்பற்ற வர்ணனை. மஹரிஷிகளுக்கு உரித்தான வசனம். உள்ளது உள்ளபடியே நீண்ட நாட்கள் பழகியது போன்று ராம-லக்ஷ்மணர்களை வர்ணிக்கிறாள் அரக்கியான சூர்பணகை.

அடுத்தபடியாக அகம்பனனென்னும் அரக்கன் கூறும் வர்ணனை வருமாறு:

ராமோ நாம மஹா தேஜா: ச்ரேஷ்ட:
ஸர்வ தநுஷ்மதாம் ।
திவ்யாஸ்ரகுணசம்பன்ன:
புரந்தர சமோயுதி: ।
[III-31-15]

தஸ்யாநுரூபோ பலவான் ரக்தாக்ஷோ
துந்துபிஸ்வன: ।
கனீயான் லக்ஷ்மணோநாம

ப்ராதா சசி நிபானன: ॥
[III-31-16]

பார்யாதஸ்ய உத்தமா லோகே
சீதாநாம சுமத்யமா ।
ச்யாமா சமவிபக்தாங்கி
ஸ்திரீரத்னம் ரத்ன பூஷிதா ॥
[III-31-28]

நைவதேவீ நகந்தர்வீ நாப்ஸரா
நாபி தானவீ ।
துல்யா சீமந்தினி தஸ்யா
மாநுஷீசு குதோ பவேத் ॥
[III-31-29]

ஸ்ரீ ராம-லக்ஷ்மண-சீதையின் வர்ணனை பரமாத்புதம். "மஹா தேஜஸ்ஸையுடையவன் ராமன். வில்லாளிகளுக்குள் மேலானவன். யுத்தத்தில் இந்திரனுக் கொப்பானவன். அநேகவித பாணங்களை உடையவன். அவனுக்கேற்ற தம்பியும் பலசாலி. சிவந்த கண்களையுடையவன். துந்துபி போன்று முழங்குபவன். சந்த்ரன் போன்ற தோற்றமுடையவன் தம்பியான லக்ஷ்மணன். சீதையென்று பிரசித்தி பெற்ற மெல்லிடையாள் உயர்ந்த பதிவ்ரதை. கருமை உரு கொண்டாலும் அழகான அங்கங்கள் வாய்க்கப் பெற்றவள். ஸ்தீரிரத்னம். ரத்னாபரணங்கள் சாற்றி பேரழகு வாய்ந்தவள். சீதைக்கு நேரான ஸ்திரீகளோ, தேவகன்னிகைகளோ, கந்தர்வப்பெண்களோ, அப்ஸரஸ்ஸரிகளோ அசுரஸ்தீரிகளோ இருக்கமுடியாது. அப்படியிருக்கையில் மனிதப் பெண்மணிகளை உவமைசொல்ல இயலாது".

மேலே வர்ணிக்கப்பட்ட ஸ்ரீசீதாலக்ஷ்மண ராமசந்திரன் நம்மையும் காத்து ரக்ஷிக்கட்டும்.



## மூவகைத் தவங்கள்

| | | |
|---|---|---|
| 1. மானதம் | - | மனதாற் செய்யப்படுவது. |
| 2. வாசிகம் | - | வாக்கற் செய்யப்படுவது. |
| 3. காயிகம் | - | சரீரத்தால் செய்யப்படுவது (விரதம்) |

## ஆசனவகையும் பலனும்

| | | |
|---|---|---|
| புலித்தோல் | - | செல்வம் |
| மான் தோல் | - | ஞானம் |
| கோரைப்பாய் | - | கீர்த்தி நாசம் |
| பச்சிலை | - | மன நடுக்கம் |
| தர்பாசனம் | - | மோக்ஷம் |
| மனை | - | பலா, வேங்கை, ஆலம் பலகை விசேஷம். இரண்டரை அடி நீளம், ஒன்றரை அடி அகலம். |

## குண நிறங்கள்

| | | |
|---|---|---|
| சத்துவ குணம் | - | வெள்ளை நிறம் (சுத்தம்) |
| ரஜோ குணம் | - | சிவப்பு |
| தமோ குணம் | - | நீலம் |

### மனித வாழ்க்கையில்

| | | |
|---|---|---|
| சிறந்தது | - | பகிர்ந்து உண்பது |
| இனிமையானது | - | நண்பரின் சிரிப்பு |
| மகிழ்ச்சிக்குரியது | - | மனமொத்த மனைவியின் பணிவிடை |
| உயர்ந்தது | - | பெற்றோர் ஆசி |
| சிறுமையானது | - | நெகிழாத உள்ளம் |
| கடுமையானது | - | பொறுமை |
| கோபத்திற்குரியது | - | புரட்சி |
| துன்பமயமானது | - | சிந்தனையின் குழப்பம் |
| பிரியமானது | - | குழந்தையின் பாசம் |
| உயிரிலும் மேலானது | - | திருவருள் |

--தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.



(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

8) ருசி விரோதி பாவங்கள் யாவை?

தத்துவம், இதம், பயன் ஆகியவற்றில் உண்மையான ஞானம் சிலருக்கிருப்பினும், "நான் உய்வு பெறுவதற்குப் பகவானைப் பற்ற வேண்டும்" என்னும் ருசி ஏற்படுதல் அருமை. இந்த ருசியைத் தடுப்பனவே ருசி விரோதி பாபங்களாம்.

9) உபாய விரோதி பாபங்கள் யாவை?

பெருமானாகிற உபாயத்தைப் பற்றவிடாமல் தடை செய்வனவெல்லாம் உபாய விரோதி பாபங்கள் எனப்படும்.

## மூலம் : 250

"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கும் அழுக்குடம்பும்" என்கிறபடியே, அவித்யா, கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களைச் சொல்லுகிறது."

1) 'பாபேப்ய:' என்னும் பதத்தின் விகுதியில் காணப்படும் பன்மையின் பொருளை விளக்குக.

சரீரமே ஆன்மா என்று மயங்கி எண்ணுதல் பொய்ந்நின்ற ஞானம் எனப்படும். மயக்கத்தோடு தீச்செயல்கள், நற்செயல்கள் செய்தால், அவை பொல்லாவொழுக்கம் எனப்படும். பழக்கம் வாசனை எனப்படும். விருப்பம் ருசி எனப்படும். ஆன்மாவையும் பரமான்மாவையும் மறைத்துக் கெடுக்கின்ற உடம்பு அழுக்குடம்பு எனப்படும்.

சரீரமே ஆன்மா என்னும் மயக்கம், அதற்கேற்ற செயல்கள், பழக்கம் (வாசனை), விருப்பம் (ருசி), சரீரத்தொடர்பு ஆகிய இவற்றைப் பன்மை குறிக்கிறது.



## மூலம் : 251

"த்ருணச் சேத கண்டுயநாதிகளைப் போலே ப்ரக்ருதி வாஸனையாலே அநுவர்த்திக்குமவை யென்ன, லோகாபவாத பீதியாலும் கருணையாலும், கலக்கத்தாலும் செய்யுமவை என்ன, எல்லாவற்றையும் நினைக்கிறது."

1) 'ஸர்வ' என்னும் சொல்லின் பொருளை விளக்குக.

துரும்பைக் கிள்ளுதல், தினவு உண்டான இடத்தைச் சொறிதல் முதலியன தன் நினைவின்றியே நடைபெறுதல் போல, சில பாபச் செயல்களும் பெருமானை உபாயமாகப் பற்றியபின்பும் பழக்க

வாசனையால நம நினைவின் றியே நடைபெறுகின்றன.

கன்மம் முதலியவற்றைக் கைவிட்டால் உலகம் நம்மைப் பழிக்குமே என்னும் எண்ணத் தாலும் சிலபாபச் செயல்கள் செய்யப்படுகின்றன.

"நம்மைப் பார்த்து உலகின ரும் தம் கன்மங்களைச் செய் யாது விட்டுவிட்டால், அத னால் அவர்கள் நசித்துப் போவதைக்கண்டால், நமக்குத் துக்கம் ஏற்படுமே!" என்னும் கருத்தாலும் சிலபாபச் செயல் கள் நிகழ்கின்றன.

அப்போதைக்கப்போது மாறி மாறி வரும் ரஜசு, தமசு ஆகிய குணங்களினால் மயக்கம் ஏற் பட்டு, இதற்கு முன்பு விடப் பட்ட உபாயங்களை இப்போது உபாயங்கள் என்று நினைத் துச் செய்யும் கலக்கத்தினாலும் சில பாபச் செயல்கள் புரிவ துண்டு.

இவையாவற்றையும் 'ஸர்வ' என்னும் சொல் உணர்த்துகி றது.

## மூலம் : 252

"ஜநமத்த ப்ரவ்ருத்திக்கு க்ரா மப்ராப்தி போலே த்யஜித்த உபாயங்களிலே இவை அந்வி தங்களாமோ என்று நினைக்க வேண்டா."

1) உலகப் பழிப்புக்கு அஞ்சிச் செய்யப்படும் செயலும் சாதனமாகுமோ? விளக்குக.

உலகத்தார் பழிக்கக்கூடாது என்பதற்காகச் செய்யப்படும் செயலும் சாதனமாகவே முடி யும்.

பைத்தியம் கொண்ட ஒருவன் இன்ன ஊருக்குப் போகிறோம் என்னும் நினைவின்றியே ஏதோ ஒரு வழியில் சென்று கொண் டிருக்கிறான். முதலில் அவ்வ ழியாக ஏதேனும் ஒரு ஊரைச் சென்றடைவான்.

அதுபோலவே, பிரபன்னனா னவன் தான் விட்டொழித்த கன்மயோகம் முதலியவற்றைப் பயன் ஏதும் கருதாமல், உல கப் பழியை நீக்கிக் கொள்ளு தற் பொருட்டு மேற்கொண்டா லும் அச்செயல்களும் சாத னங்களாகவே முடியும். எனவே, இவையும் பாவச் செயல்களே யாகும்.

## மூலம் : 253

"கலங்கி உபாய புத்யா பண் ணும் ப்ரபத்தியும் பாதகத்தோடு ஒக்கும்."

1) ஒருமுறை பெருமாளைச் சரணமடைந்த பின் மறுபடியும் சரணடைவதால் குற்றம் வருமா? விளக்குக.

"பெருமாளாகிற உன்னைச் சர ணகப் பற்றினேன்!" என்று நினைத்தலே பிரபத்தி எனப் படும். இதை நம்பிக்கை யோடு ஒரு முறை செய்தாலே போதும். பெருமானின் அங்கீ காரம் கிடைத்துவிடும்.

துன்பம் துடைப்பதற்கோ இன்பம் அடைவதற்கோ கலக் கத்தினால் மறுபடியும் பிரபத்தி செய்தால், அது உபாய புத் தியுடன் செய்யப்படும் கன்ம ஞான பக்திகளைப் போன்றே பாதகத்திலேயே சேர்க்கும்.

"போய பிழையும் புகுதரு வான் நின்றனவும் தீயினில் தூசாகும்." என்பது ஆண்டாள் திருவாக்கு.

ஒருமுறை சரணடைந்து விட் டாலே இதுவரை செய்த பாபங்களும், இனிச் செய்யப் படும் பாபங்களும் தீயினில் இட்ட தூசுபோல அழிந்துபோ கும் என்று அருளிச் செய்வதால் திரும்பத் திரும்பச் சரணடை வது பாபச் செயலேயாகும்.

2) 242 முதல் 253 வரையுள்ள மூலங்களின் கருத்தைத் தொகுத்து வரைக.

கண்ணபிரான் தாம் செய்ய வேண்டிய செயல்களை அருளிச் செய்கிறான். 'அஹம்' என்னும் சொல்லுக்கு ஞானம், வன்மை, சேஷித்துவத் தொடர்பு ஆகி யவற்றை உடைய பகவானே பொருளாவான். பகவானுக்கு மற்ற குணங்கள் பல இருப்பி னும் இங்கு இம்மூன்று குணங் கள் மட்டுமே எடுத்துக்காட்டுவ தற்குரிய பயனாம். 'அஹம்' என்பது தன் சுதந்தரத் தன் மையை அறிவித்து, அருச்சுன னுடைய கலக்கத்தைப் போக்கு வதற்குக் கருவியாக உள்ளது. சாரதியாய் நின்ற பாரதந்திரிய மும் பெருமானுடைய சுதந்திரத் தன்மையின் முதலிடமே!

"ஞானம், வன்மை, உரிமை இவை அற்றிருக்கும் உன்னை" என்பது 'த்வா' சப்தத்திற் குப் பொருளாகும். பய னைத் தடை செய்யும் அதுவே பாவ சப்தத்தின் பொருளாகும். அவித்தை முதலிய பன்மையின் பொருள். "போக்கிக் காக்கின் றேன்!" என்று கண்ணபிரான் கூறுகின்றான். பிரகிருதி வாச னையாலும், லோகாபவாத பீதி யாலும், கலக்கத்தையும் செய் யும் யாவற்றையும் 'ஸர்வ' சப் தம் குறிக்கிறது. வீட்டின் பேற் றுக்கல்லாமல், உலகப் பழிப் புக்கு அஞ்சிச் செய்பவையும் சாதன கோடியிலேயே சேரும். கலங்கி உபாய புத்ய'" பண்

னும் பிரபத்தியும் கன்மஞான பக்திகளைப் போலவே பாதகத்துக்கு ஒப்பாகும்" என்பவனவாகிய கருத்துக்கள் மூலம் 242 முதல் 253 வரையில் காணப்படுகின்றன.

## மூலம் : 254

"மோக்ஷயிஷ்யாமி - முக்தனாம்படி பண்ணக்கடவேன்."

1) நான்காவது பதமான 'மோக்ஷயிஷ்யாமி' என்பதன் பொருள் யாது?

'மோக்ஷயிஷ்யாமி' என்பதற்கு "உன்னே முத்தனாம்படிப்பண்ணக்கடவேன்" என்பது பொருளாகும். அதாவது, 'மேற்கூறிய பாபங்கள் யாவற்றினின்றும் நீ விடுபட்டவனாகுமாறு செய்யக் கடவேன்!' என்பது பொருளாகும்.

## மூலம் : 255

"ணிச்சாலே நானும் வேண்டா; நீயும் வேண்டா; அவை தன்னடையே விட்டுப் போங்காண் என்கிறுன்."

1) இஷ்மாயி என்பதன் பொருள் யாது?

'மோக்ஷயிஷ்யாமி' என்னும் வினைச்சொல்லில் 'இஷ்யாமி' என்னும் பகுதியை 'ணிச்சு' என வடமொழியாளர் கூறுவர்.

"உன் பாபங்கள் நீங்குவதற்கு நானும் யாதொரு முயற்சியும் செய்யவேண்டா; அவை அகல நீயும் முயல வேண்டா. என்னிடம் உனக்குள்ள சம்பந்தத்தால் அவை தானே விலகிப் போகும்" என்று கண்ணபிரான் அருச்சுனனுக்கு அருளிச் செய்கிருர்.

## மூலம் : 256

"என்னுடைய நிக்ரஹ பலமாய் வந்தவை நான் இரங்கினால் கிடைக்குமோ? என்கை"

1) மோக்ஷ இஷ்யாமி என்று அருளிச் செய்ததன் கருத்து யாது?

பெருமானுடைய அருள் சேதனனிடம் பாயும் போதுதான் சேதனன் தான் செய்த கன்மாக்களின் பலனை அனுபவிக்கிருன். இதை மனதில் கொண்டுதான் பகவான் "என்னுடைய நிக்ரகத்தின் (தண்டனையின்) பலனாக உனக்கு ஏற்பட்ட துன்பங்கள், யான் உன் மாட்டு இரக்கங்கொள்வனேல் நிற்குமோ? அன்றி இருந்த இடம் தெரியாது மறையாவோ?" என்று பெருமாள் அருளிச்செய்கிருர்.

## மூலம் : 257

"அநாதி காலம் பாபங்களைக் கண்டு நீ பட்டபாட்டை அவை தாம் படும்படி பண்ணுகிறேன்."

1) சேதனன் செய்த கன்மங்கள் தன்னாலேயே அவனைவிட்டுப் போகும் என்பதைப் பற்றிப் பகவனுடைய கருத்து யாது?

கண்ணபிரான் அருச்சுனனைப் பார்த்து, "அருச்சுனா! அநாதி காலமாகத் துக்கத்திற் கேதுவான பாபங்கள் வந்து உன்னைச் சேரும் போதெல்லாம் அவற்றைக் கண்டு நீ நடுங்கினாய் அல்லவா! அத்தகைய நடுக்கத்தை இப்போது அப்பாபங்கள் உன்னை விட்டு விலகிப் போகுமாறு செய்கிறேன்" என்று அருளுகிருர்.

"இப்பாபங்கள் முன் பொரு கால் நம்மிடம் இருந்தன. இப்போதுதான் 'நம்மைவிட்டு நீங்கின," என்று தோன்ருத வாறு போக்குவதே பகவானுடைய கருத்தாகும்.

(தொடரும்)

## ஐவகை மௌனம்

| | | | |
|---|---|---|---|
| 1. | வாக்கு மௌனம் | - | எதுவும் பேசாதிருத்தல் |
| 2. | மனோ மௌனம் | - | எதுவும் நினையாதிருத்தல். |
| 3. | கர்ண மௌனம் | - | அந்தகரணம், பொறிகளால் (கண், மூக்கு, காது, நாக்கு உட்பட) நினைவு கொள்ளாதிருத்தல். |
| 4. | காய மௌனம் | - | சரீரம் அசையாதிருத்தல் |
| 5. | காஷ்ட மௌனம் | - | சவம் போல் கிடத்தல் |

## வினைகள் (செயல்பாடுகள்)

| | | |
|---|---|---|
| நித்திய கர்மம் | - | தினமும் உறங்குவது, குளிப்பது, உண்பது, வழிபடுவது |
| நைமித்திக்கர்மம் | - | ஏகாதசி, ஸ்ரீராமநவமி, சதுர்த்தி, சிவராத்திரி போன்ற சம்பந்தமான திருநாட்களில் மேற்கொள்ள வேண்டிய வினைகள். |
| காமிய கர்மம் | - | ஒரு குறிப்பிட்ட பலனுக்காக மேற்கொள்ளவேண்டிய வினைகள் |
| நிஷித்த கர்மம் | - | செய்யக்கூடாத, விலக்கப்பட்ட வினைகள் |

தொகுத்தவர் : கமலா மாரியப்பன் - கோவை.





# KARVETINAGAR
# SRI VENUGOPALASWAMI TEMPLE

### A SYMBOL OF VIBRANT FAITH

*Faith is the source of light*
*Faith is the all-pervading wisdom*
*So declare the sages and saints*

It is the abiding faith of the devout that made the Temple of Sri Venugopalaswami an edifice of everlasting glory.

The Deity - Sri Venugopalaswami - was the patron God of the Karvetinagar rulers whose immeasurable love for the Lord finds its eloquent expression in the hymns composed in a bygone epoch.

Towering above the dusky hills and the green valley below, the temple presents a spectacular view.

The exquisitely carved sculptures, intricately designed pillars and elaborately decorated mandapas are indeed a connoisseur's delight.

The graceful forms of Lord Venugoplaswami and His consorts - Sri Satyabhama and Sri Rukmini captivate our hearts. The Deity -known as bounteous *Kalpavriksha* - bestows His blessings on all those who pray to Him.

The celebrated poet Sarangapani who was the court-poet of the rajas of Karvetinagar, declares unequivocally that the easiest means for salvation in the Kaliyuga is the darsan of Sri Venugopalaswami. It is said Thyagaraja the renowned composer, attained bliss after worshipping Lord Venugopala.

The *darshan* of Sri Venugopalaswami is an exhilarating spiritual experience. The Lord, one of the most delightful manifestations of Sriman Narayana, is a veritable Kalpavriksha.

Karvetinagar is located on Puttur - Chittoor road, about 25 Kilometres away from Tirupati. The Temple is being kept open for worship from early hours of the morning to late hours of the night.



* * *





# விநாயகர் பாடலில் வினோதக் கருத்துக்கள்

திரு. வ. கோவிந்தன் - புதுப்பேட்டை.

அங்கதம் என்பது பொது வாகப் புகழ்வது போலப் பழித் தும் பழித்தலைப் போன்று புகழ்ந்தும் பாடுகின்ற ஒருநிலை யைச் சுட்டும். இதனை செம் பொருள் அங்கதம் என்றும் பழி கரப்பங்கதம் என்றும் இரண்டு வகைப்படுத்துவர்.

தண்டியலங்காரம் என்னும் அணி இலக்கண நூல் 'புகழாப் புகழ்ச்சி' என்று இதனைச் சுட் டும்

பழிப்பது போலும் பான்மையின் மேன்மை
புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி
(-தண்டி-84)

பழித்தல் போலும் பாகுபாட டான் ஒன்றற்கு மேம்பாடு தோன்ற உரைப்பது புகழாப் புகழ்ச்சி எனனும் அலங்காரமா கும்.

இவ்வலங்காரத்தின் வழி நின்று புலவர்கள் பலவிதமா னப் பாடல்களைப் பாடியுள் ளார்கள். மனிதர் மட்டுமின்றி கடவுளரையும் இவ்விதங்களில் இகழ்வது போன்று புகழ்ந்து பாடுவது பண்டைய வழக்க மாய் இருந்து வந்திருக்கிறது.

இவ்வழக்கத்திற்கு முழுமு தற் கடவுளான விநாயகரும் பலவிதங்களில் ஆட்பட்டுள் ளார். இவ் விநாயகரின் பெருமைகளைத் தம் பாடல்க ளில் அமைத்து அங்கதச்சுவை மிளிர யாக்கப்பட்டுள்ள கவிகள் ஒன்றிரண்டைக் காண்போம்.

இராம கவிராயர் என்ற ஒரு புலவர் 'டூப்ளே' புதுச்சேரியில் ஆண்ட காலத்தில் வாழ்ந்த வர். இவர் திருவாய்ப் புராணம், சாரப்பிரபந்தம் போன்ற நூல் களை இயற்றியவர். ஒருமுறை தம் குடும்பத்துடன் உச்சிப் பிள் ளையாரைத் தரிசிக்கச் சென்றார். அப்போது திருடன் ஒருவன் இவர் முடித்து வைத்திருந்த பணம் முழுவதையும் அவிழ்த் துக்கொண்டு சென்று விட் டான். புலவர் தம் பணம் முழுவதையும் காணாமல் திகைத் தார். அழுதார், புலம்பினார்; என்ன செய்வதென்றே தோன் றாமல் திகைத்தார். தாம் பணம் இழந்த கதையை யாரிடம் போய் முறையிடுவது என்று தத்தளித்தார். இவர் காணச் சென்ற இறைவனிடமே முறை யிட்டார்.

அம்முறையீடு அவரின் இயல் பிறகு ஏற்ப பாடலாக வெளி வந்தது. யார் திருடியது என்று புலப்படாத நிலையில் அனைத்திற்கும் மூலகாரணமாய் இருக்கும் பெருமானே காரணம் என்று எண்ணினார். அதனால் அவரையே குற்றம் சாட்டினார்.

தம்பியோ பெண்திருடி; தாயரு டனபிறந்த
வம்பனோ நெய்திருடும் மாயனாம்- அம்புவியில்
மூத்த பிள்ளை யாரோ முடிச்சவிழ்த்தீர் கோத்திரத் திற்குள்ள குணம்

"அழகிய நில உலகில் கோயில் கொண்டுள்ள சிவபெரு மானது முதல் குழந்தையாகிய கணபதியே! உன்னுடைய தம்பி யாக முருகன் வள்ளியம்மையை களவில் கொண்டு போனார்.

வஞ்சனையாய் நடிப்பதில வல் லவரான தங்கள மாமனான திருமால் கிருஷ்ணவதாரததில் நெய் திருடினார. நீங்கள என னுடைய முடிச்சை அவிழததீர. அதில உளள பொருளை எடுத் துக கொணடீர; இத்திருடடுத தொழில் உமது குடுமபததா ருக்கு இயற்கையாக அமைநத பணபாகும்" என்ற பொருளு டைய பாடலைப் பாடித துதித தார். பின்னர அவருடைய பணம் இறைவனின திருவரு ளால திருமபக கிடைததாக வரலாறுகள கூறுகினறன. இச செயல் மூலம் நமககுச சுவைத துப படிகக அருமையான பாடல் ஒனறு கிடைதது.

கற்பனைக் கருவூலம என்று புலவரகளால போறறபபடடவர சிவபபிரகாச சுவாமிகள. பதி னேழாம நூற்றுணடில் வாழந தவர வீரசைவர. பிரபுலிஙக லீலை, திருவெஙகைக கோவை, நாலவர நான் மணிமாலை உள ளிட்ட எணபதிறகும மேறபட்ட நூல்களைத தமிழுலகிறகுத தந்தவர். இவரின தனிப்பாடல மிக்க இனிபபுடையவை. இவரு டைய பாடலகளிலும் விநாய கர நடம் புரிவதைக் காணலாம.

இவர் ஒருமுறை ஒரு திருமணத்திற்குச் சென்றிருந தார். அபபோது மணமக்கடகு சேஷையிடும போது ஒரு அரு மையான தததுவம பொதிநத அங்கதச் சுவையுடையப பாட லைப் பாடினார்.

"சிவபெருமானிடம் விநாயகர் வந்து தன பெரிய காதைக் காட்டி 'என செவியை ஆறு முகன கிள்ளினான' என்று சிணுங்கிடவும், சிவன வேல வனை நோக்கி 'ஏன அபப டிச்செயதாய்?' என்று கேட் டார். அதற்கு ஆறுமுகன 'அபபா! என் முகஙகளில உளள கணகளை அணணன எண ணினார' என்று பதில கூற, அவர வெமபிக கொணடிருக கிற விநாயகரைப பாரதது, 'நீ ஏன அபபடி விகடம செய தாய?' என்று கேட்டார. அவரோ 'என துதிககையின நீளம் எததனை முழம உள ளதென்று தன கையால் தமபி அளநதான', என்று மறுமொழி கூற, அதைக கேடடு ஆறுமுகப பெருமான சிரிததபடி நிறகவும், உடனே சிவபெருமான உமா தேவியைப பாரதது 'உன பிள ளைகளைக கவனிததுக் கொள', என்று கூறினார். உமையம மையும், கணிபதியை அருகே அழைதது ஆறுதல சொலலி அகமகிழவு கொண்டு இபபிள ளைகள விளையாடடைக கணடு ரசிததார். அத்தகைய உமாதேவி உஙகளைக காபபாராக" என்று பாடுகினறார.

அரனவ னிடத்திலே யைங்கரன் வந்துதா
னையவென் செவியை மிகவும்
அறுமுகன் கிளளினா னெனறே சிணஙகிடவு
மதத்ன்வே லவனை நோககி
விரைவுடன வினவவே யண்ணனென் சென்னியில்
விளங்குகண் ணெண்ணின னென
வெமபிடும பிளளையைப் பார்த்துநீ யப்படி
விகடமேன செய்தா யென
மருவுமென கைந்நீள முழமளந் தானென்ன
மயிலவ னகைத்து நிற்க
மலையரைய னுதவவரு முமைய வளை நோக்கிநின்
மைந்தரைப் பாரா யெனக்
கருதரிய கடலாடை யுலகுபல வண்டங்
கருப்பமில் பெற்ற கன்னி
கணபதியை யருகழைத் தகமகிழ்வு கொண்டனள
களிப்புட னுமைக் காக்கவே.

அஙகதப் பாடலகளுககுத தனி உயிரோட்டம கொடுத துப் பாடியவர காளமேகப்புல வர். இவர இயற்பெயர வர தன. இவருடைய காலம பதி னைநதாம நூற்றுண்டு. இவர 'திருவானைக்கா உலா' போனற பிரபந்தஙகள பல பாடி இருப பினும், இவர் தனிபபாடலகள மிக்க சுவை உடையவை. இவர பல கடவுளரை நையாணடி செயது பல பாடலகளைப பாடி யுளளார.

சிதம்பரததில உளள கறபக விநாயகரைப் பற்றி நிநதாஸ துதியாயப பாடிய பாடல ஒனறு மிக்கச சுவையுடை யது.

'அசைவினைக கொணட மதம பொழியும் யானை முகததி னையுடையவனாகிய தில்லை நகரில கோயில கொணடிருக கினற கணபதியினுடைய பெரு வயிறறினைக் கணடு வாட டமுறறுத தேவரகள எபபோ தும கண இமையாது கவலை யுடன இருநதார்கள. கூரமை யான வேல்படையினையுடைய ஆறுமுகன் கண்ணீர் உடையவ னானார. நெறறிக கணணையு டைய சிவபெருமான் ஆலகால நஞ்சினையே உணடு விடடார். திருமாலும பயம அடைந தார். உமையும உடல் பாதி யானாள. 'அழகிய இவவுல கினைப படைபபதும வீணே' என்று கருதியவனாக அயனும சோறு இறங்காமல அலைகின றவன ஆயினான்! இனி இவ வுலகநதான யாதாகுமோ?'

கம்பமத கட களிற்றுன் றில்லை வாழும்

கணபதிதன் பெருவயிற்றைக்
கண்டு வாடி
உமபரெலாம் விழித்திருந்தா
ரயில் வேற்செங்கை
யுடையவறு முகவனுங்கண் ணீரா
ருனான்
பம்புசுடர்க கண்ணனுமோ நஞ்சுண்
டான்மால்
பயமடைநதா னுமையுமுடல்
பாதி யானாள்
அம்புவியைப் படைத்திடுவே தவம
தேயென்
றயனுமனன மிறங்காம
லலைகின் றுனே!

விநாயகப்பெருமான் மகோத ரம என்ற பெரு வயிறுடை யவன என்பதையும், தேவர்கள் கண இமைக்கும இயல்பறறவர் எனபதையும், ஆறுமுகன பன் னிரணடு கண்களை உடையவர எனபதையும், சிவபெருமான் நஞ சுணடதையும், திருமால் பாறகட லில் பளளி கொணடதையும், உமாதேவி சிவனின உடலில பாதி ஆனதையும, பிரம்மன் அனன வாகனததை உடை யவன எனபதையும் இருபொ ருளபட பாடி மகிழ்விக்கினறுர

ஒரு பொழுது காளமேகப்பு லவர் காஞ்சிபுரம் செல்கின்றுர். விநாயகப பெருமானுக்கு உற்ச வம் நடந்து கொண்டிருக்கிறது. பெருமான பெருச்சாளி வாகனத் தில அமர்ந்து பவனி வருகின் றுர். இநத காடசியை நையாண டித் தோன்ற தம இயல்பிற்கு ஏற்பப பாடுகினறுர் ஆசிரியர்.

"பாவம்! ஐயோ இந்தப் பிள் ளையை எலி இழுத்துப்போகின் றதே! சிவனுடைய மழு எங்கே? திருமாலின சக்கரம் எங்கே? பிர மனின தணடம் எங்கே? இத னைத தடுககாமல் இருப்ப தினால அவர்களிடம் இருந்த இநத ஆயுதங்கள் பறிபோய்விட் டன்வோ" எனறு பாடுகின்றுர்.

"மூப்பான் மழுவும் முராரிதிருச்
சக்கரமும்
பார்ப்பான் கதையும் பறிபோச்சோ-
மாப்பார்
வலிமிகுந்த மும்மதத்து வாரணத்தை
யையோ
எலியிழுத்துப் போகின்ற தென்?"

இத்துடன விட்டாரா புல வர்? ஆறுமுகனைப் பற்றிப் பாடவநத இடததில் அண்ணன் விநாயகரைப் பற்றியும் மறவா மல ஒரு பாடலில பாடுகின் றுர். பாடல வரிகள் எப் படி இருப்பினும, அவர் அமைத துளள சிலேடை நயம் எண்ணி எணணி இறுமபூதெய்தத் தக் கது.



"அபப னிரந்துணணி யாத்தாள்
மலைநீலி;
ஒப்பரிய மாம லுறிதிருடி
சப்பைக்கால
அணணன் பெருவயிற னாறுமுகத்
தானுக்கிங்
கெண்ணும் பெருமை இவை"

திருவலஞ்சுழி எனனும் ஊரில் உள்ள விநாயகரமேல் பாடல பாடத்துவங்குகின்றுர். இப்

பாடலில் தும்பி, கரி, தநதி, மாதங்கம் , சிந்தூரம், கள பம், ஆம்பல் எனபனவெலலாம வெவ்வேறு பொருளைக குறிப பன. ஆயினும் இவை அனைத் தும் யானையின பெயருமா கும். இவற்றைக் குறிப்பிடு வது போல யானை முகதத னான விநாயகனையும் குறிப் பிட்டுக் காட்டுகினறுர்.

பறவாததும்பி; கருகாத வெஙகரி;
பண்புரண்டே
இறுகாத தந்தி; யுருகாத மாதங
கமிந்துறுதல்
நிறவாத சிந்துரம்; பூசாக்களப
நெடுஞ் சுனையில்
பிறவாத வாம்பல்வலஞ் சுழிக்கேவரப்
பெற்றனனே!

-இக்காளமேகப் புலவரின் கட்டளைக கலிததுறைப் பாடலுடன் "இம்பர வானெல்லை இராமனையே பாடி" என்று தொடங்கும் அந்தகக் கவி வீரராகவ முதலியாரின் பாடலையும ஒப்புநோக்கி எணணி இனபுறத் தக்கது.

அந்தகக் கவி வீரராகவ முதலியாரின் மற்றொரு பாடலைக் காண்போம். அவர பிறவிக்குருடர். தொண்டை நாடடில உளள புதூரில் பிறந்தவர். சீட்டுக்கு ருவி பாடுவதில் வல்லவர. பதினேழாம் நூற்றுணடில் வாழந தவர. சேயூர் முருகன் பிள்ளைததமிழ், சேயூர் கலம்பகம் போன்ற பல பிரபந்தஙகளைப பாடியுள்ளார். இவர் விநாயகக் கடவுள் மீது நிந்தாஸதுதியாகப் பாடியுளள பாடல மிக்கச சுவையுடையது.

"வீரததைக் காட்டும் மதம பொழிகினற பிள்ளையாரே உனக்குப பெண் வேண்டும் என ருல் யாரும கொடுக்கமாட்டார் கள. ஏனெனில உனஅப்பன ஓடு ஏநதி பிசசை எடுதது உண பவர; மாமனாகிய கணணன களவு செய்தவன; உஙகள ஊர செஙகாடு; உனககோ யானை முகம; உனதமபியோ "கடமபன" - எனற பெயரை உடையவன. உன அனனையோ நீலி (நீலநிறமுடையவள) உனக்கும பெரு வயிறு (மகோதரம)" என்று பாடு கினறுர.

"வீரம் சொரிகினற பிள்ளா யுனக்குப்
பெணவேண்டு மென்றால
ஆருங கொடா ருங்களப்பன் கபாலி
யமமான திருடன்
ஊருஞ் செங்காடு நின்றன் முகம்
யானை யுனக்கிளையோன்
பேருங கடமப னுன்ருய்
நீலி நிற்கும் பெருவயிறே!"

என்பது அவர நிநதாஸ்துதி யாயப பாடிய பாடல.

எனவே பல புலவரகள அங்கதசசுவையாகப பல பாடலகள பாடி இலககிய இனபமும் பகதிச் சுவையும மிளிர வழி வகுத துளளாரகள. காலநதோறும் படிததுப படிததுச சுவைதது இனபுறத தககவை இபபாடல கள.



## அயல்நாடுகளில் விநாயகர் வழிபாடு!

விநாயகர தமிழநாட்டுககு மடடும உரிய கடவுளரலலர. விநாயகர வழிபாடு வெவவேறு பெயர்களில, உருவங களில் இநதியத துணைககண்டததிலும, சாவகம, பாலி, போரணியோ, திபேத், பரமா, சயாம, சீனா, ஜபபான், இநதோசீனா மறறும் தமிழரவாழும் அயலநாடுகளிலெல்லாம விநாயகருககுக் கோவிலகளும வழிபாடுகளும உளளன

ஜப்பானில இடர களையும பிளளையார வழிபாடடை ஒன்பதாம் நூறறுணடில "கோபா கெய்கி" எனபவர துவககினார

சீனாவில் பிளளையாருக்குப பெயர
"க்வான் ஷிடியிக்"

ஜபபானில பிளளையாருககுப பெயர
"விஞயக்ஷா" - "க்வான்ஷன் ஷேர்"

பர்மாவில கணபதியை
"மகாபிணி" எனறு வழஙகுவர்.

கமபோடியாவில பிளளையாரின பெயர்
"ப்ரா கணேஷ்" - இதுவே "ப்ராணேஷ்" ஆனது.

மங்கோலியாவில பிளளையாருககுப பெயர
"தோத்கார்" - "அவன்காகன்"

சீனாவில் 'யானைமுககடவுள' திருவுருவம வடிககபபடடது ஆறுவது நூறறுணடிலாகும

--தொகுததவர கமலா மாரியபபன - கோவை.

# திருவலஞ்சுழி ஸ்வேத விநாயகர்

"சன்மிஷ்டை"

திருவலஞ்சுழி எனபது சிறந்த சிவக்ஷேத்திரம. இது சென்னை - தஞசை இருப்புப்பாதையில் "சுவாமி மலை" என்ற ரயில் நிலையததிலிருந்து நேர் வடக்கே, இரண்டு கி.மீ. தொலைவில் உள்ளது. காவிரித் தென்கரையில் மிகப்பழமையான சிறபபு வாய்ந்த, விணமூட்டும் கோபுரங்களைக கொணட இருபத தைந்து கோயில்களில் இதுவுமொன்று.



"திருவணுவரததம - தக்ஷிணுவர்த்தம" எனறெலலாம இத்தலம் பற்றி வடமொழி நூலகள போற்றிபபுகழ்கினறன. ஊர சிறியதுதான்! ஆனால, மாபெரும் வீதிகள, நாறபுறமும விநாயகர் ஆலயம். கிழககிலும் தெற்கிலும நுழைபாதைகள், கோபுரவாசல கிழககு நோக்கியது.

கோவிலுககு அழகும மேனமையும அளிப்பது கோபுரமே! கோபுர தரிசனமே கோவிலில் அஷ்ட தரிசனஙகளில் முதன்மை பெறறுளளது. இக்கோவிலுக்கு மூன்று கோபுரங்கள் வரை உள்ளன. முதல் கோபுரமே ராஜகோபுரமாகும. ஐந்து நிலைகளைககொணடது. கணணையும் கருத்தையும் கொள்ளை கொள்வது தலைதூககி அணணுநதுதான பார்க்க வேண்டும்!

கோவிலுக்கு இது ஒனறே நுழைவாயில! இது வழியேதான திரும்பியும் வரவேணடுமெனபது முககிய குறிபபாகும. கோயிலின் அமைப்பு முறை சோழ, பாண்டியக கலைகளின மேனமையை நன்கு விளககுவதாக உளளன. இஙகுளள இறைவனுககு கபர்த்தீஸ்வரர், கறபகநாதர எனற திருநாமஙகள். தமிழமொழியில "ஜடைமுடிநாதர" எனறும் சொலவதுணடு. இறைவியின பெயர் பிரகன்நாயகி, பெரியநாயகி என்பன.

"கபரததம" என்பது இறைவனின ஜடைககுரிய சிறபபுப் பெயர. அதனால சடையுடைய ஈசர - கபரத்தீஸவரர் எனறு போறறப்படுகிறார. இககிராம ஆண-பெண குழநதைகளுககுப பெருமபாலும இபபெயர்களையே வைதது வழிபடுகின்றனர.

அரசலாறு (அரிசொல் ஆறு)ம, காவிரி நதியும் அடுததது கோவிலின வடபுரததில, சுமார இரணடு பரலாஙகு தூரததில் பாயந்து ஓடுகினறன. எப்பொழுதும் இதில் நீர்ப்பெருக்குண்டு. இங்கு ஸ்நானபானம் செயயலாம். அழகிய அகலமான படிததுறைகள் உள்ளன.

## தோற்றுவாய்

திருவலஞ்சுழி என இத்தலம் விளஙகக் காரணம அகத்திய முனிவரது கமண்டலததிலிருந்து வெளிவந்த காவிரி, சோழமனனனின வேண்டுகோளின்படி, பெருக்கெடுத்து சோழநாடுவரை வநதது. திருவலஞ்சுழியை அடைந்தபொழுது, ஸ்தல மூர்த்தியின் சிறப்பை முன்னிட்டு வலமாகப் பிரதக்ஷிணம் செய்து வந்து மேலே செல்லாமல், ஆதிசேஷன் பூஜிக்க வந்த அந்தப் பிலத்தின வழியே பாதாளத்திற்குள் இறங்கிவிட்டது.

மிகுந்த பிரயாசையுடன் கொண்டு வரப்பட்ட காவிரி மறைந்ததும், மன்னன் பெரிதும் கலங்கி இறைவனைப் பிரார்த்தித்தான். தவிர, இத்தலத்திற்கு வடகிழக்கில் உள்ள "கோட்டையூர்" என்ற திருத்தலததில ஏரண்டமுனிவர் எனற முற்றும் துறநத துறவி ஒருவர் இருந்தார். ("ஏரண்டம்" என்றால் கொட்டைமுத்து எனபது பொருள) அவர் இததலத்தில் இருந்து தவம் செய்து வந்ததால், இப்பெயரால் வழங்கப்படுகிறார. அமமுனி சிரேஷடரிடம் செனறு மன்னன் முறையிட்டான.

அவர் அந்தச் சுழியில, "ஓர் அரசனுடைய முடித்தலையை அல்லது ஒரு துறவியினுடைய சடைததலையை அர்ப்பணித்தால, காவிரியாறு மேல நோககிப் பாயநதோடும்" எனறு கூறினார். இதைக்கேட்ட மன

னன் "ஆறு பெருக வேணடும்; நாடு நன்மையடைய வேண டும்" என்ற நலலெணணத்து டன் தானே அபிலச சுழியில் விழுந்து இறந்தான

ஏரண்ட முனிவரும் நமமுடைய சொலலினால அலலவோ அரசன் இவ்வாறு செயதான என்று வருததமுறறு, தானும அப்பிலததில விழுநது உயிர நீத்தார். காவிரியும பாதாளத்தில செலலாமல பெருக் கெடுதது ஐநது கிலோமீடடருக்கப்பால் மேலே எழுந்தது. காவிரி இததலத்தின வட திசையில சுழிதது்ப் பூமிககுள சென்றதால் "வலஞசுழி" என்று இததலம பெயர் பெற்றது.

காவிரி மேலெழுநது ஓடின தலம் "மேலககாவிரி" என.று இனனும் வழஙகி வருகிறது. இது குமபகோணத திற்கு மேறகே, கொடடையூருக்குக் கிழக்கே உளளது திருநாவுக்கரசு சுவாமிகள், தமது கொடடையூர்ப் பதிகததில், திருவலஞ்சுழி இறைவனை ஒவ்வொரு பாடலிலும குறிப்பிடுவதால், இநத வரலாறு ஒருவாறு விளங்குகிறது. "அபிதான் சிநதாமணி" எனற நூலிலும் இவ வரலாறு காணபபடுகிறது.

## ஸ்தலத்தின் சிறப்புத்தன்மை

இததலம இவ்வாறு சிறப்புறறு விளஙகுவதறகு இரணடு முககியமான காரணஙகளைக் கூறலாம. முதலாவதாக, பிரகனநாயகி அமமையார் இங்கு தவமியறறி கபரததீஸவரரைத திருமணம செயது கொணட சம்பவமாகும்.

இரணடாவதாக, தேவேநதிரன "அமுத விநாயகரை" இஙகு பிரதிஷடை செயது வழிபடடு, பெறறரும பேறும. மேலும இது பாடல பெறற ஸதலமும கூட! திருஞான சமபநதபபெருமான அருளிய தேவாரத திருப பதிகம ஒனறே இததலததின சிறபபை,

"என்ன புண்ணியம் செயதனை
நெஞசமேயிருங்கடல வையத்து
முன்ன நீபுரி நலவினைபபயனிடை
முழுமணித்தரளஙகள
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
வாணனை வாயாரப்
பனனியாதரித் தேததியும்
பாடியும வழிபடுமதனாலே!"

எனறு எடுததுககாடடுகிறது. தவிர, இத்தலததிறகு ஆதிசஙகரபகவதபாதாள் நேரில வநதிருந்து, விநாயகபபெருமானைத தரிசித்து ஸதோத்திரம் அருளியுளளார. அதுபோல திருநாவுககரசு சுவாமிகளும் இஙகுளள இறைவனை வணஙகி திருபபதிகம் பாடியுளளார எனபது குறிபபாகும.

## ஜடா தீர்த்தம்

இராஜ கோபுர வாயிலைக் கடநது சென்றால வலதுபுரம ஒரு குளம இருக்கிறது. அதறகு "ஜடா தீரததம்" எனறு பெயர். அததீர்ததம் உண்டான வரலாறு சிறிது கூறுவோம்.

முனனொரு சமயம் பிரகனநாயகி தேவியார, சிவபெருமானை ஜடாதாரியாய விவாஹம செய்து கொளள வேணடுமெனற நோக்கததுடன தவககோலம பூண்டு, இவ்விநாயகரை வழிபட்டுத் தவமிருநதாள. தினமும நீராட ஒரு தடாகம இஙகு இலலையே எனறு ஏககமுற்றாள்.

இதை உணர்நத சிவபெருமான் தேவிக்கு ஜடாதாரியாயக காட்சியளித்துத தனது சடையினினறு ஒரு திவலை நீரை வெளிபபடுததினார். அநத ஒரு துளி நீர விழுந்த இடம தான இனறு "ஜடா தீரத்தம்" எனறு வழஙகி வருகிறது. இததீரததததில தேவியார தினமும ஸநானம செயது, இறைவழிபாட்டைத தொடரநது செயது இறைவனைத திருமணம செயது கொணடார் என புராண இதிகாசஙகள குறிபபிடுகினறன.

இறைவி பூஜித்துவந்த விநாயகப பெருமானுககு இங்கு ஒரு மணடபம தீரததககரையின தெனமேற்கில அமைந்துளளது. ஆகவே, இததீர்த்தததின் தேவதை "கபரததீஸ்வரர்" என்பது. கோயில ஸதல விருடசம் "விலவம்". இததீரததததில மூழகினால - நீராடினால "மனததில எணணிய காரியம உடன் நிறைவேறும; பிறப்பையும் துனபஙகளையும நீககும்" என ஸதல புராணம் கூறுகிறது.

ஜடா தீரததததிலுளள மகா கணபதியைத தரிசிததல நலம பல பயககும. பஞசமூரததி கோபுர வாசலைக் கடநதால, பலிபீடம், மூஷிக வாகனம், கொடிமரம் ஆகியன அமைந்துளளன.

## மூலஸ்தானம்

காயதரி மண்டபததிலுளள தூணகளில் சிறபக கலைகள் மிளிரகினறன. இததூண்கள கருஙகலதானா? எனறு வியககும வணணம சிறபியின சிநதனை நுட்பச சிறபவேலைபபாடுகளுடன விளஙகச் செயகினறன. இம மணடபததில மேல விதானஙகள முதல அடிததளம வரை

ஒவ்வொரு பகுதியும பிரமிக் கத தகக சிறப வேலைபபாடு கொண்டதாய் விளஙகுகின றது. இதைப போனற சிற பககலை நிறைந்த தூணகளை வேறு எங்கும காணபது அரிது எனலாம்.

கப்பட்ட "பெரிய வாழைப்பூ குத்துவிளககு" வைக்கப்படடிருக் கிறது. நல்ல வேலைபபாடுடன் காட்சியளிககிறது.

இமமண்டபததிற்கு நுழைவா யில தெறகுபபுரம். நுழை வாயி



இஙகு ஒனபது அடி உயர மும, ஏழு அடி அகலமும உளள ஒரே கருஙகலலால செதுககப பட்ட பல துளைகளை உடைய பலகணி ஒனறு பொருததபபட் டுளளது. இதன மூலமாக சுவேத விநாயகரைத தரிசிக கலாம். சநநிதி கிழககு நோக கியது. கருஙகலலால ஆக்

லின முகபபில கருஙகலலால நனகு செதுக்கப்பட்ட துவார பாலகரகள இருபுறமும் அமைக் கபபட்டிருக்கினறனர. நுழைந ததும முனனதாக நீலவேணி - கமலாமபாள எனற இருசக்தி கள் சமேத ஸவேத விநாயகர் - பஞ்சலோகஙகளால உருவாக்

கப்பட்ட உதஸவ விநாயகர் - வெகு அழகாய் விளங்குகிறார்.

அடுதது ஸ்வேத விநாயகர் கருவறை. சதுர்புஜங்களுடன், தந்தம், பாசம, அங்குசம், மோத கம முதலியவற்றைத் தரித்து எழுந்தருளியுள்ளார். இவரைப் பார்க்கப் பதினாயிரம் கண்கள் போதா! உளி கொண்டு செதுக் கப்பட்ட கல் விக்ரஹம் அலல! ஸவயம் வியக்தம. அமுத மய மாய் வெண்மை வாரணர் திகழ் கினறார்.

உருவததில் மிகச சிறிய தாயினும், பக்தியுள்ளோருக்கு எவறறையும நல்கும நரகுஞ்சர ரூபன். மிகப்பெருமை வாயந தவர். ஸ்வேத விநாயகரின் கோஷ்டததில பலவித ஒன்பது பலகணிகள அமைககப்பட்டுள் ளன. மிகவும் நேரததியாக உளளன. பசசைக் கற்பூரத தால்தான இவருக்கு அபிஷே கம். வெண்மையான நிறமு டையவராய் இருததலால் அவ ருக்கு ஸ்வேத விநாயகர் - வெளளைப் பிளளையாா என்ற பெயர் வழஙகு வருவது வெளிப் படை.

ஸவேதபபெருமானைத தரி சிதது அருள பெற்று வலமா கச சென்றால கொடிமரம, பலி பீடம், நநதிகேஸவரர் இவரக ளைப பாரததுவிட்டு, மூனறாம் கோபுரவாயிலை அடைகிறோம். பின, உடல தததுவஙகளை உணரததும, பதினாறு கால் மணடபததை தாணடிச் சென் றால், சபா மணடபம காணப் படும். மணடபததின் வலப புரததில் "பஞ்சசுழி விநாயகர், ஸ்ரீவளளி தேவசேனா சமேத ஸ்ரீசுபரமணயரும, இடதுபுறம ஸோமாஸகநதரும்" (உத்ஸவர்) இடமபெறறுளளார்கள.

## கபர்த்தீஸ்வரர் சந்நிதி

மூலஸதானத்தில் கபரததீஸ வரர லிஙகாரவடிவில் பிர திஷ்டை செய்யபபடடுள்ளார். இறைவனுககுப் பின்புறம நக்ஷத திர அலங்கார தீபமும, வலப புறம் ஐநது குததுவிளககுத தீபமும் ஜ்வலிக்க இறைவன கரு ணாகரக கடவுளாக அருள பாலிக கிறார்.

ஈஸவரனைச சுறறி உடபிரகா ரத்தை வலம வந்தால கோஷ டத்தில சபாநாயகரும, மகாக ணபதியும அமர்ந்துள்ளாரகள. சபாநாயகர் நமமுன் ஆனநத தாணடவ மூர்ததியாய்க காட்சி கொடுககிறார. இன னும் பல மூரததங்களைப பார்க் கலாம.

## சனீஸ்வரர் சந்நிதி

இககோவிலில் மற்றொரு விசே ஷமுண்டு. அதாவது ஸப தவிடஙக ஸதலங்களில் ஒன றான "திருநள்ளாறு" க்ஷேத்தி ரததில சனீஸ்வரனை மட்டுமே ஸதாபிதது வழிபடுவது போல், இஙகு வடக்குப் பிராகாரததில ஈசானய திசையில அவரை மட டுமே பிரததியேகமாக கோவில கொணடருளச செயது, சநநிதி நனகு அமைக்கபபட்டு பூஜிதது வருவதுதான.

பிரதி சனிதோறும மக்கள இங்கு வநது வழிபடுகிறார கள. சனிப்பெயரசசிக்கு "திரு நள்ளாறு" போகமுடியாதவரகள இங்குவநது பகவானைத தரி சிதது, தஙகள் குறைகளை நீக்கிக் கொள்ளுகிறாரகள என பது வெள்ளிடைமலையாகும.

## இறைவியின் சந்நிதி

கருவறையில் பிரகன நாயகி திரையணிநது, புனமுறுவலு டன பூரண சநதிரனைபபோல பிரகாசிககினற முகவிலாசதது டனும திருமணக் கோலததுட னும, சதுரபுஜஙகளுடன் வரத பயஹஸ்தஙகளுடன காடசி தரு வது - திருவானைக்கா (ஜமபு கேஸவரம)வில கோவிலகொண டுள்ள அன்னை அகிலாண டேஸவரியை நினைபபூட்டுகி றது. கருவறையில மின சார விளககுகள இல்லை. அம் மையார பதினாறு பேறுநதரும் வரபரசாதினி எனபது நாட றிந்த செயதியாகும.

## கல்வெட்டுக்கள்

இக்கோவிலில இராஜராஜனு டைய காலம முதல பல கல வெட்டுககள ஏராளமாயுள்ளன. இராஜராஜனுககு "சிவபாதசேக ரன" என்ற பெயர இருபபதாகக் கூறுகிறது ஒரு கலவெட்டு. மற்றொரு கலவெட்டு அவன மனைவி தநதிசகதி விடஙகியா ரும், மகளாகிய குநதவியும, மாதேவடியும தாஙகள் அணிந திருநத அணிகலனகள யாவற றையும இககோவிலுககு அரப பணிததுள்ளனர. நாயனமார களது திருவிழாககள, திருவி ளக்கு முதலியவைகளுககாக விடபபட்ட நிலதானஙகளைக குறிக்கின்றன மறற கலவெட டுக்கள.

## கோயில் உத்ஸவங்கள்

இககோவிலில இரணடு விசே ஷமான உதஸவஙகள நடைபெ றுகின்றன. ஒன்று விநாய கசதுரததி உதஸவம - அதா வது பிரமமோதஸவமாக சிரா வண ஏகாதசியனறு துவககப பட்டு பாதரபத சுக்ல (ஆவணி மாதம) சதுரததியனறு (பதது நாடகள) தேவேநதிரபூஜையும, ரதோதஸவமும் நடைபெறுகின றன. மறுநாள, பஞசமூரததி தீரததவாரி உதஸமும அருகி லுள்ள அரசலாற்றில நடைபெ றுகின்றது.

இரணடாம உதஸவம பஙகுனி மாதம ஸ்வாதி நக்ஷததிரததன்று வள்ளியமமை யார தினைபபுனம காதத லும, வேட ரூபததில முரு கபபெருமான சுவாமிமலையிலி ருநது எழுநதருளச செயத லும, யானை வள்ளி நாயகியை விரட்டலும அவள பயநது போய் முருகபபெருமானிடம காதலகொணடு - காதல விவா ஹமும மிகக விமரிசையாகக கொணடாடபபடுகின்றது.

இதற்கடுததநாள, சுவாமி மலையில முருகபபெருமானுக கும் ஸ்ரீவள்ளியமமையாருககும திருககலயாண மஹோதஸவ மும நடைபெறுகின்றது. ஆயி ரககணககான மககள கணடு களிக்கும சிறபபான உதஸவங கள இவைகள. இதனன்றித திருககாரததிகையில தீபோற சவமும, மாரகழியில ஆருதரா தரிசனமும, நிறைபணி உத்ஸ வமும ஏகதின உதஸவமாக நடததபபடுகின்றன. இவவுறச வஙகள யாவும ஸவேத விநா யகரை முன்னிட்டே நடைபெ றுகின்றன எனபது முக்கிய குறிபபாகும

இக்கோவிலில காலை திருவ னநதல முதல அரதத ஜாமம வரையில மூன்று காலபூஜை நாடோறும நடைபெற்று வரு கின்றன. அருளமயமான ஸவேத விநாயகரின ஆசிகள உலகம முழுவதும பொஙகிப் பெருகட்டும!

❋❋❋

# பாகவதம் பிறந்த கதை

திரு. தெ. சுப்பிரமணியன் - திருநெல்வேலி.

மஹாபாரதம் எனும் ஒப்பற்ற இதிஹாச நூலினை வடமொழியில தொகுத்தளித்தவர வேத வியாசர எனும் வியாசபகவான். இவர் கேட்டுக கொணடதறகிணஙக அதனைத் தம கோட்டினால (தநதம) மகாமேரு மலையில எழுதியருளினார முழுமுதறகடவுளாம் வினாயகப பெருமான. இபபடி அரிய ஓர சாதனை படைததும தன மனதில் அமைதியில்லாமல ஏதோ ஒன்றை இழநதுவிட்டது போலவும், ஏதோ ஒரு குறையிருப்பது போலவும் தவிததார வியாசபகவான. அப்பொழுது அவர் முன தோன்றியருளுகிறார் நாரத மகரிஷி. தன் தவப்பயனால அவரைக காணபபெறறதாகக் கருதித் துதிதது அவருக்கு ஆசனம் அளிததுத தம் மனக்குறையை வெளியிடுகிறார வியாசர். அதனைச செவியுறற நாரதர "உமமால் இயறறப்பட்ட நூலில் தரமததையும் அதை அடையும உபாயத்தையும கூறினீர். ஆனால பரமபொருளின் லீலா வினோதஙகளோ, திருவருள் பாலிக்கும் திறனோ விரிவாகச சொல்லபபடவிலலை. பகவானின மகிமைகளை எடுதது ரைக்காத வரையில் உமககு மன அமைதியோ, மகிழசசியோ ஏற படாது. இனி நீர பரம கருணா மூர்த்தியான இறைவனின புகழைப் பாடுக" என அறிவுரை கூறி மறைநதருளினார.

அதன பிறகே வியாச பகவான் தனககு நாரதமுனிவர உபதேசிதத ஸ்ரீமத பாகவ்தத்தை 18000 ஸலோகஙகளில பாடியருளினார. ஆதியில ஸ்ரீஹரியால் பாகவதம் பிரமமாவுக்குத திருவாய் மலரநதருளபபட்டது. பிரமமா அதனை நாரத முனிவருககு உபதேசித்தார. நாரதர அதனை



வியாச பகவானுககு எடுததியம்பினார. வியாசர தனது புத்திரரான சுகமுனிவருக்கு அதயயனம செயவிததார. பின சுகப்பிரமமதால கங்கைக் கரையில, மரணததை எதிர்நோககியிருநத பரீட்சிதது ராஜாவுககு ஏழுநாட்களில அருளப்பட்டது. அதனை முனிவரகள, பெரியோரகள் மத்தியில திருசசேவியேறற சூதமுனிவர நைமியசாரண்ய முனிவர்களான சௌனகாதி மகரிஷிகளின வேணடுகோளுக்கிணஙகி உபதேசிதத ருளினார. பகவான பிரம்மா, நாரதர, வியாசர, சுகர போன்ற ரிஷிகள மாத்திரம அறிந்த பாகவதம இமமண்ணுலகிற்கு வநதது, பரீட்சிதது மன்னனால் தான. அவருககு இவ்வரிய வாயப்பு எப்படி ஏற்பட்டது? அது தொடர்பான விவரங்களைத தொகுத்தளிப்பதே இக் கட்டுரையின நோக்கம்.

## பரீட்சித்துராஜா பிராமண சாபம் பெற்ற வரலாறு

குந்திபுத்திரனான அரஜுனனுககும சுபததிரைககும பிறநத

புததிரனே அபிமன்யு. இநத அபிமன்யுவுககு விராடதேச மன னனின மகளான உததிரையிடம பிறநதவனே 'பரீடசித்து'. இவ னுககு 'விஷ்ணுராதன' எனும ஒரு பெயரும உணடு. அதறகு 'விஷ்ணுவால காககப்படட வன' எனறு பொருள. மகாபா ரத யுததததில பீமனால தாக்கப படடு தொடை பிளககபபடடுக குறறுயிருகக கிடநத துரியோத னனைத் துரோணபுத்திரனான அசுவததாமன பாரதது மனம வருநதி, 'கௌரவ ராஜனே, எனது தந்தையை வஞசனை யாகக கொனறனர். இனறு உமமையும குறறுயிராககினர. இதறகுக காரணமான பாண டவரகளை இனறிரவே கொல் வேன" எனச சபதமிடடான அதனபடியே இருளில் பாண டவர் பாசறை புகுநது உறக் கததிலிருநத பாணடவ சேனாதி பதி திருஷ்டதயுமனைக கொன ருன. அபபடியே எலலாப பாஞசாலரகளையும, திரௌபதி மககளையும கொனறுவிடடான. இதறகுப பழிவாஙகப புறபபட டனர பாணடவரகள. கஙகைக கரையில வியாசரின அருகில மறைவாய இருநத அசுவததா மனைக கண்டனர. ஸ்ரீகிருஷ் ணனையும், பாண்டவரகளையும பாரத்த அசுவததாமன கீழே கிடநத ஒரு துரும்பை (தரபபை எனறும கூறுவர) மநதிரம ஓதி "இது பாணடவ வம்சததை முறறிலும அழிக்கக்கடவது" எனறு விடுததான. அது உத தரையின கரபபததை அழிக கச சென்றது அதை மஹா விஷ்ணு தன சகராயுதததையே கவசமாககிக (கருவைக) காதத ருளினார் இதறகிடையில குரு புததிரனான அசுவததாமனைப பிடிததுக கடடி அவன குடு மியை அதிலுள்ள ஜோதி மணியுடன அறுததுத துரத திவிட்டான் அரஜுனன.

இநத விஷ்ணுராதன தாயின கர்பபததிலேயே பகவானின திவய சொரூபம கணட பேறு பெறறவன அபபோதே "இநத அரிய உருவம யாருடையதாக இருககும?" எனறு சோதிதது அறிய விருமபியதாம. அப படிப் பரீடசிததுபபாரததததால பரீடசிதது - எனவும பெயர வந்தது

இத்துணைப் புகழுடன பிறநது வளரநத பரீடசிதது வைத தரம புத்திரர மனனனாக முடிசூடடி வைததுவிடடுத தம பியருடன தவவேடம பூணடு வனம சென்றுர பின தர ணியைப் பரிபாலனம செயது வநதார பரீடசிதது மனனன ஒருசமயம காடடுககு வேட டையாடச சென்றுர. மானக ளைத துரததிச சென்று முடி வில பசிதாகம மேலிட மிகச சோரநது போன்றார தணணீ ரைத தேடி அலைநது ஒரு முனிவரின ஆசிரமம வநத டைநதார அஙகே கணமூடித தியானததிலிருநத முனிவரிடம "சிறிது நீர வேணடும' ' என யாசிததார். முனிவர ஆழநத தியானததிலிருநதபடியால கண் திறககவோ பதில கூறவோ இலலை. இதனால வெகுணட மனனன அருகில கிடநத ஒரு செததப பாமபினைத தன வில நுனியால தூககியெடுதது முனிவர கழுததில போட்டுவிட டுப போயவிடடான இதுவே விதியின கொடுமை பசி தாகத தால மதிமயஙகித தவறு செய துவிடடான முனிவருககோ நடநதது ஒனறும தெரியாது அவரது தியானம கலையவே இலலை நடந்ததைக் கேளவிப பட்ட இநத முனிவரது குமா ரன சிறுபையனாயினும மிக வும ஆததிரமும அவ மானமும அடைநது, "என தநதையை அவமானபபடுததிய ராஜன எனனால ஏவபபடும் தக்ஷகன எனும நாகம தீணட இனறைககு ஏழாம நாள உயிர விடுவான" எனச சாபமிடடு விடடான. பிறகு ஓடிச்சென்று தநதையின கழுததில கிடநத பாமபைப பாரதது துககம கொணடு வாயவிடடு அழுதான. முனிவர தியானம கலைநது சிறுவனான மகனிடம, "குழந தாய, ஏன அழுகிருய?" எனறு கேடடார. மகன விவரமனைத தையும கூறினான. அநத முனிவருககு மனனன பேரில கோபமே வரவிலலை. மாருகத தன புததிரனைககடிநது, "நாட டையும பிரஜைகளையும காக கும மனனன கடவுளுக்கு ஒபபா னவன. அவன செய்த சிறுபி ழைககு உனனால பெரிய சாபம தரபபடடது. இது பெரிய தவறு. கடவுள உனனை மன னிபபாராக' எனறு சொனனார.

முனிகுமாரனது சாபததைப பறறி பரீடசிதது ராஜனும கேள விபபடடான தனது தவறுக காக மனம வருநதி முனிகுமார னது சாபமும நனமைககே என மனம தேறித தனது புததி ரனை (ஜனமேஜயனை) ராஜா வாககிவிட்டு ஸ்ரீகிருஷ்ணரை மனதில எணணியபடி கங கையின தெனகரையில பரப பிய தரபபையின மீது வடககு நோககி அமரநதார. அப போது மனனன உயிரவிடப போவது அறிநது முனிவர கள், பெரியோரகள அனைவரும அவ்விடம வநது கூடினர. அது சமயம மனனரின பூரவபுணய பலததால ஸ்ரீசுகமுனிவர அவ

(37 ஆம பககம பாரகக)

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

'உமைப்ரியன்'

## ஒன்பதாம் அத்தியாயம்

## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

பகவான் சொன்னது :

*அபி சேத்ஸுதுராசாரோ பஜதே
மாமனன்யபாக் ।
ஸாதுரேவ ஸ மந்தவ்ய:
ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ: ।। (30)*

"தீமை பல புரிபவனாக இருந்தாலும் அவன் வேறொன்றையும் நினைக்காது என்னைமட்டுமே தொழுவானாயின், அவனை சாது என்றே கூற வேண்டும். ஏனென்றால் அவன் தீவிரமான தீர்மானம் கொண்டவனாகத் திகழ்கின்றான்."

[இரு நண்பர்கள், ஒருவன் தான் சினிமாவிற்குப் போவதாகவும் மற்றொருவன் கோயிலுக்குப் போவதாகவும் கூறிக்கொண்டு பிரிகின்றனர். சினிமா பார்த்துக்கொண்டிருப்பவனின் கண்கள் திரையைப் பார்த்துக்கொண்டிருந்தாலும், காதுகள் ஒலியைக் கேட்டுக்கொண்டிருந்தாலும், அவன் மனம் மட்டும் நண்பன் கோயிலுக்குச் சென்றிருப்பதையும், இறைவன்முன் நண்பன் நின்று கொண்டிருப்பதையும், பூசாரி பிரஸாதம் வழங்குவதையும் தன் கற்பனையில் பார்த்துக்கொண்டிருந்தான்.. கோயிலுக்குச் சென்ற நண்பரோ, கோயிலில் நடைபெறும் நிகழ்ச்சிகளில் மனத்தை ஒட்டாமல், திரைப்படம் காணச் சென்றிருந்த நண்பன் பற்றியும், அவன் சென்ற சினிமா அரங்கின் காட்சிகளே மனதில் நிழலாடியன. பொழுதுபோக்குக்காகச் சென்றவன் மனதோ இறைநாட்டம் கொண்டது. கோயிலுக்குச் சென்றவன் மனமோ சினிமா பார்க்கத் தொடங்கியது. ஆம் எண்ணங்களால் மக்கள் உயருகிறார்கள். தாழ்கிறார்கள். ஆகவே எவ்வளவுதான் தீயகாரியங்கள் பல புரிந்தாலும் அவன் மனம் இறைவன்மீது நாட்டம் கொண்டுவிட்டால் நாளடைவில் மனமும், அறிவும் பண்படுகிறது. நல்லதே காண நல்லதே செய்ய அவன் மனம் விரும்புகின்றது. இதனால், தீயோன் நல்லோன் ஆகின்றான். பொழுது புலர புலர உலகத்தில் இருள் அகன்று, வெளிச்சம் பரவுகின்றது. இறைவன் எனும் திருவருள் மனதில் சிறிது சிறிதாக பெருகும்போது அந்த உள்ளத்தில் இருள் எனும் தீய எண்ணங்கள் அழிந்து போகின்றன. இதற்கு களவுத்தொழில் புரிந்துவந்த வான்மீகி, இராமாயணம் பாடிய முனிவராக உயர்ச்சிபெற்றது ஒரு சிறந்த உதாரணமாகத் திகழ்கின்றது. கொள்ளை அடித்துவந்த திருமங்கைமன்னன் மாயவன் திருவடி ஸ்பரிசத்தால் ஆழ்வாரானார்.]



*க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வச்
சாந்திம் நிகச்சதி ।
கௌந்தேய ப்ரதிஜானீஹி
ந மே பக்த: ப்ரணச்யதி ।। (31)*

